உ

# திருச்செந்தூர்ச் செந்திலாண்டவன் பிள்ளைத்தமிழ்.




ஆசிரியர்

## பகழிக்கூத்தர்

விளக்கவுரை
குன்றக்குடி ஆதீனப்புலவர், தமிழாகரர்,
சைவத்தமிழ்மணி, சைவத்தமிழ் அறிஞர், சித்தாந்தச் செல்வர்
**வித்துவான். க. கதிரேசன். எம்.ஏ; பி.எட்**
பூவாளுர். 621 712 பேசி : 09865193754

**தோரணவாயில்**

குறிஞ்சிக்கிழவன் ஆகியமுருகப்பெருமான், உயிர்களின் மலப்பகைகடியச் சிறப்பாக எழுந்தருளிய இடம் படைவீடு - பாசறை. அவை திருப்பரங்குன்றம், அலைவாய் எனப்பெறும் திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருஏரகம், குன்றுதோராடல், பழமுதிர்சோலை என்பன. இவற்றுள் திருச்செந்தூர், அலைகள்மோதும் இடத்தில் - அலைகளின் விளிம்பில் ( வாய்= விளிம்பு. ) அமைந்துள்ளதால் அலைவாய் எனப்பெற்றது. இதனைச் செந்தில் என்பதும் பண்டைவழக்கு.

செந்தில்மேய கந்தன் செந்திலாண்டவன். இப்பெருமான் புகழ்கூறும் வென்றிமாலைக் கவிராயர் இயற்றிய திருச்செந்தூர்த் தலபுராணம் முதலாக உள்ள இலக்கியங்களின் தொகுப்பு **திருச்செந்தூர்ப் பிரபந்தத் திரட்டு**. இந்நூல், மதுரை நான்காம் தமிழ்ச்சங்க வித்துவானாகிய **மு.ரா. அருணாசலக் கவிராயர் அவர்கள்** எழுதிய அரும்பதவுரையுடன் 1911 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இந்நூலில் அமைந்துள்ளதே **திருச்செந்தூர் செந்திலாண்டவன் பிள்ளைத்தமிழ்.** இத்திரட்டில் உள்ள அனைத்து நூல்களுக்கும் இக்கவிராயர் அருஞ்சொற்பொருள் தந்துள்ளார். சொற்சுவை, பொருட்சுவை, பற்பல சந்தக் கவிச்சுவை, கற்பனை, அணிநலங்களுடன் மிளிரும் இப்பிள்ளைத்தமிழை இயற்றியவர் **பகழிக்கூத்தர். இவர் திருமால் அடியவர், வைணவ அந்தணர்.** இதனை இப்பிள்ளைத்தமிழின் சிறப்புப் பாயிரவெண்பா

“ திருமாது சேர்மார்பன் தேர்ப்பாகற்(கு) அன்பு, தருமால் பகழிக்கூத் தன். “

என்று குறிப்பதால் அறிகிறோம். இவர் மிகச்சிறந்த வைணவராயினும் தமது கொடிய வயிற்றுவலி தீர்த்தருளுமாறு செந்திற்கந்தனைச் சிந்தையில் நிறுத்தித் தமது பெரும்புலமை ஒளிர இப்பிள்ளைத் தமிழை இயற்றி நோய்தீர்ந்தார். இந்நூலினை அரங்கேற்றுங்கால் கேட்டுத் தலையசைத்துச் சுவைத்த அன்றைய இக்கோயில் நிர்வாகத்தினர் இவருக்குக் கோயில்மரியாதை யாதொன்றும் செய்திலர். இவரோ அதுபற்றி எண்ணாது நோய்தீர்ந்த பெருங்களிப்பில் வீடடைந்தார். இப்பிள்ளைத்தமிழைச் சுவைத்த செந்திற்பெருமான் இவர்க்குச் சிறப்புச்செய்யக் கருதி, இவரது ஆழ்ந்த உறக்கத்திடையே வந்து தமது மார்பில் அணிந்திருந்த விலையுயர்ந்த மாணிக்கப் பதக்கத்தை இவர்க்கு அணிவித்து மறைந்தான். காலை திருவனந்தலின்போது பெருமான் அணிந்திருந்த பதக்கம் காணாமல் திகைத்த அனைவரும் அதனைத் தேடியபோது அது பகழிக்கூத்தர் மார்பில் இருந்ததைக் கண்டு, பெருமானின் திருவுளம் உணர்ந்து இவரைத் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்று அனைத்துவகை மரியாதையும் செய்தனர் என்பது இவரைப்பற்றிய வரலாறு என்பர்.

பலவகைச் சிறப்புகள் மணக்கும் இந்நூலினைக் கற்றுமகிழ, கவிதைபோலன்றி மோனை எதுகை அடி ஆகியவற்றை எளிதில் அறியவியலாதவாறு உரைநடைபோல் அத்திரட்டில் அச்சிட்டிருந்த இதன்பாடல்களை அடிமுதலியன எளிதில் அறியுமாறு அமைத்தும், சந்திபிரித்தும், அருஞ்சொற் பொருளை இன்றைய நிலைக்கேற்பக் கூட்டியும், பொழிப்புரை தந்தும் எழுதி இங்குத் தந்துள்ளேன். படித்துச் சுவைத்து அருள்தரு செந்திலாண்டவன் திருவருள் பெற வேண்டுகிறேன்.

குருவருளுக்கும் திருவருளுக்கும் வணக்கம்.

அன்புள்ள
குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்
**வித்துவான்.க. கதிரேசன் எம். ஏ; பி;எட்.**
பூவாளூர். 621 712 பேசி : 09865193754.

*********

## திருச்சிற்றம்பலம்

**பிள்ளைத்மிழ் :** சிவபெருமானைத்தவிர, உமையம்மை முதலிய தெய்வங்களையோ மக்களுட் சிறந்தாரையோ குழந்தையாகப் பாவித்துக் கலிவிருத்தத்தில் பருவத்துக்குப் பத்துப் பாடலாக நூறு பாடல்களில் பாடுவது. இது ஆண்பால் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என்று இருவகைப்படும். ஆண்பால் பிள்ளைத்தமிழாயின் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம் , வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்று பத்துப் பருவங்களிலும்; பெண்பால் பிள்ளைத்தமிழாயின் முன்னைய பத்துப்பருவங்களில் இறுதி மூன்று பருவங்களுக்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை அல்லது நீராடல், ஊசல் என்பன அமையும்.

************************

# செந்திலாண்டவன் பிள்ளைத்தமிழ்.

## சிறப்புப்பாயிரம்.

நேரிசை வெண்பா.

செந்தமிழ்க்கு வாய்த்த திருச்செந்தில் பதிவாழும்
கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தான் - அந்தேர்
திருமாது சேர்மார்பன் தேர்ப்பாகற்(கு) அன்பு
தருமால் பகழிக்கூத்தன்.

**குறிப்புரை** : தமிழ்= தமிழ்நாடு. அம்தேர்= அழகிய தெளிந்த. தேர்ப்பாகன்= அருச்சுனற்குத் தேரோட்டியாகிய திருமால். மால்= வேட்கை.

**பொழிப்புரை** : அழகில்தெளிந்த திருமகள்வாழும் மார்பினையுடையவனும், அருச்சுனனுக்குத் தேரோட்டியவனுமாகிய திருமாலின்மேல் அன்புசெலுத்தும் வேட்கையுடைய வைணவராகிய பகழிக்கூத்தன், செந்தமிழ் நாட்டில்உள்ள திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு கந்தப்பெருமானுக்குப் பிள்ளைத்தமிழ்க் கவிதை இயற்றினான்.

## அவையடக்கம்.

அத்தனையும் புன்சொல்லே ஆனாலும் பாவேந்தர்
எத்தனையும் கண்டுமகிழ்ந் தெய்துவார் - முத்தி
புரக்கும்அரன் தந்தகந்தன் பூண்அணிமுந் நான்கு
கரக்குமரன் பிள்ளைக் கவி.

**குறிப்புரை** : புரக்கும்= காத்தருளும். முந்நான்கு= பன்னிரண்டு. பாவேந்தர்= பாக்களில் தலைசிறந்தோர். எத்தனையும்= எந்த அளவாயிருந்தாலும். எய்துவார்= ஏற்றுப்படிப்பர்.

**பொழிப்புரை** : முத்திப்பேற்றைக் காத்தருளும் சிவபிரான் தந்தருளிய கந்தன் ஆகிய பன்னிருகைக் குமரனின் பிள்ளைத்தமிழை, பாக்களில் தலைசிறந்தோர், இதில் உள்ளசொற்கள் அத்தனையும் எந்தஅளவுஅற்பமானவையே என்றாலும் ஏற்றுப்படித்து மகிழ்வார்கள்.

**நூற்பயன்.**

மருநாண் மலர்ப்பொழில் உடுத்ததடம் எங்கும்அலை
வாய்கொழித்(து) எறியும்முத்தை
வண்டலிடும் எக்கர்புடை சூழ்திருச் செந்தில்வரு
மயில்வாக னக்கடவுள்எம்
குருநாதன் ஒருதெய்வ யானைதன் பாகம்
குறக்கொடிக் கும்தழைசிறைக்
கோழிக் கொடிக்கும் குமார கம்பீரன்
குறும்பிறை முடிக்கும்பிரான்
இருநாழி நெற்கொண்டு முப்பத் திரண்டறமும்
எங்கும்முட் டா(து)அளக்கும்
இறைவிதிரு முலைஅமுதம் உண்டுஞா னம்பெருகும்
எம்பிரான் இனியபிள்ளைத்
திருநாமம் எழுதுவார் கற்பார் படிப்பார் செகம்பொது அறப்புரந்து
தேவாதி தேவரும் பரவுசா யுச்சியச்
சிவபதத்(து) எய்துவாரே.

**குறிப்புரை** : மருநாண்மலர்= மணக்கும் புத்தம்புது மலர். தடம்= கரை. அலைவாய்= கடற்கரை. கொழித்த= ஒதுக்கிய. வண்டலிடும் = மகளிர் விளையாடும். பாகன்= ஒருபக்கம் தந்தவன். குறக்கொடி= வள்ளிநாயகி. தழை சிறை= தழைத்த சிறகு. குமாரகெம்பீரன்= குமரனாகிய பெருவீரன். முட்டாது= தட்டுப்பாடின்றி. திருமுலைஅமுதம்= திருமுலைப்பால். நாமம்= கீர்த்தி = புகழ். சாயுச்சிய சிவபதம்= சிவபிரானுடன் இரண்டறக்கலத்தல் - அத்துவிதமுத்தி,

**பொழிப்புரை** : மணம்மிக்க புத்தம்புது மலர்களைஉடுத்ததுடன், கடற்கரை எங்கும் அலைகள் ஒதுக்கிய முத்துகளை அலைகள்ஒதுக்கிய நுண்மணல் சூழ்ந்திருக்கும் திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவனும், மயிலூர்தியையுடைய கடவுளும், எமது ஒப்பற்ற குருநாதனும் தெய்வயானை அம்மைக்கும் வள்ளிநாச்சியாருக்கும் சிறகுதழைத்த சேவலுக்கும் தன்பக்கத்தில் இடம்தந்தவனும் , குமாரனாகிய பெருவீரனும், மூன்றாம்பிறை சூடிய சிவபிரான் அளித்த இருநாழி நெல்கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் தட்டுப்பாடின்றி எங்கும் அளந்த இறைவியின் திருமுலைப்பால் உண்டு ஞானம் பெருக்கிய எம்தலைவனும் ஆகிய முருகனின் பிள்ளைத்தமிழினை எழுதுபவர், கற்பவர், படிப்பவர் அனைவரும் இவ்வுலகம் முழுவதையும் தமது ஒருகுடைக்கீழ் ஆண்டு, மறுமையில் தேவாதி தேவரும் வணங்கும் சிவசாயுச்சியமாகிய அத்துவித முத்தியடைவர்.

## காப்புப்பருவம்.

காப்புப்பருவம் - பாட்டுடைத்தலைவரைத் திருமால் முதலியோரால் காவல்புரிவிக்கும் பருவம்

*************

திருமால்.

பூமா(து) இருக்கும் பசுங்களபப் புயபூ தரத்துப் புருகூதன்
போற்றக் ககன வெளிமுகட்டுப் புத்தேள் பரவப் பொதிகைமலைக்
கோமா முனிக்குத் தமிழுரைத்த குருதே சிகனைக் குரைகடற்குக்
குடக்கே குடிகொண் டிருந்தசெந்தில் குமரப் பெருமான் தனைக்காக்க தேமா
மலர்ப்பொன் செழும்பொகுட்டுச் செந்தாமரையில் வீற்றிருக்கும்
தேவைப் படைத்துப் படைக்குமுதல் சேரப்படைத்துப் படைக்கும்உயிர்

ஆமா(று) அளவுக்(கு) அளவாகி அனைத்தும் தழைக்கும் படிகருதி
அளிக்கும் படிக்குத் தனியேசங்(கு) ஆழி படைத்த பெருமாளே.

**குறிப்புரை** : பூமாது= நிலமகள். பசுங்களபம்= வளமான கலவைச்சந்தனம். பூதரம்= மலை. புருகூதன்= இந்திரன். போற்ற= வணங்க, ககனவெளிமுகட்டு= வானவெளியின் உச்சி. புத்தேள்= சிவபிரான். முனி= அகத்தியர். குருதேசிகன்= குருவுக்குக் குரு - முருகன். குடக்கு= மேற்கு. மாமலர்= பெரியதாமரைமலர். பொகுட்டு= தாமரைக்கொட்டை. படைத்து= தோற்றுவித்து. படைக்குமுதல்= படைத்தலுக்கு ஆதியாகிய பிரகிருதிமாயை. படைக்கும்= தோன்றும். ஆமாறு= உயிர்கள் பெருகும் வகை. அளிக்கும்படி= காப்பதற்கு. ஆழி= சக்கரப்படை.

**பொழிப்புரை** : தேன்பொருந்திய தாமரைமலரின் கொட்டையாகிய தனது உந்தியில் விளங்கும் நான்முகனைத் தோற்றுவித்து, படைத்தலுக்கு ஆதியாகிய பிரகிருதி மாயையைத் தோன்றச்செய்து, தோற்றுவிக்குமுயிர்கள் பெருகும்வண்ணம் காத்து, தனது காலம்வரை அதற்குத் தகுதியுடையவராய் அனைத்தும் தழைக்கும் வண்ணம் காக்கச் சங்கினையும் சக்கரப்படையையும் உடைய திருமாலே !

நிலமகள் தங்கியிருக்கும் சிறந்த கலவைச்சாந்து பூசிய தோள்களாகிய மலைகளையுடைய இந்திரன் துதிக்க, அண்டவெளி உச்சியில் இருக்கும் சிவபிரான் வணங்க, பொதிகைமலையில் வாழும் தலைமைசான்ற அகத்தியருக்குத் தமிழுரைத்த குருவாகிய குருவை, முழங்கும் கடலுக்கு மேற்பால் திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் குமரப்பெருமானைக் காத்தருள்வாயாக

2. **சிவபெருமான்.**

உடல்வளை குழவி மதியமும் நதியும்
உரகமும் ஒழுகு செஞ்சடைக் காட்டினர்
உமைமுலை குழைய மருவிய புனிதர்
உரைகொடு பரவு தொண்டரைக் காத்தவர்
உமிழ்திரை மகர சலதியில் விளையும்
உறுவிட வடவை கண்டமட்(டு) ஏற்றினர்
உடைமணி கனக பரிபுரம் முரல
ஒருமுறை பவுரி கொண்டமெய்க் கூத்தினர்

வடவரை முதுகு நெளிநெளி நெளிய
வரிசிலை எனஓர் அம்பினைக் கோத்தவர்
மறுவறு முழுவெ ணில(வு)எழு முறுவல்
வளரொளி இருள்வ னம்கெடப் பூத்தவர்
மருவிய சகள வடிவினர் அரிய
வடகலை தமிழ்வ ளம்பெறச் சேர்த்தவர்
மதுரையில் இறைவர் இரசத பொதுவர்
மணமலி பதயு கங்களைப் போற்றுதும்
மிடவிய மதுர வரிஅளி குமுறி
இடறிய களப குங்குமத் தூள்பொதி
இமசலம் ஒழுகு கனதன விரகம்
எழுகுற வனிதை சிந்தையில் சேர்ப்பனை
இடிபடு முரசம் முழவுடன் அதிர
எதிர்பொரு நிருதர் தம்படைப் போர்க்கள
இடம்அற முதிய கழுதுகள் நடனம்
இடஅடல் புரியும் மொய்ம்பனைத் தூற்றிய
கடதட வழுவை முகமுள கடவுள்
கருணையின் முதிய தம்பியைப் பார்ப்பதி
கரமலர் அணையில் விழிதுயில் மருவு

களிபெறு குதலை மைந்தனைப் பூப்பயில்
கடிகமழ் தருவின் இறைமகள் புதிய
கலவியின் முழுகு கொண்கனைப் போற்றிசெய்
கலைமகள் பரவு குமரனை மதுர
கவிதரு குரிசில் கந்தனைக் காக்கவே.

**குறிப்புரை :** உடல்வளை குழவி மதியம்= வளைந்த மூன்றாம்பிறை. உரகம்= நாகப்பாம்பு. ஒழுகு சடை= தொங்கும் சடை. திரைஉமிழ் மகர சலதி= மீன்களுடன் அலைகள் எறியும் கடல். உறுவிடம்= மிகக்கொடிய நஞ்சு. கண்டமட்டு ஏற்றினர்= கழுத்தில் அடக்கியவர். பவுரி= அழகாக ஆடும் ஒருவகைக்கூத்து. நெளி நெளி நெளிய= மிகவும் வளைய. அம்பு= திருமாலாகிய அம்பு. இருள்வனம்= அஞ்ஞானக் குடிஇருப்பு= முப்புரம். முறுவல் பூத்தவர்= சிரித்தவர். சகளவடிவு= திருமேனியுடைய உருவம். இரசதப் பொதுவர்= வெள்ளியம்பலத்தார். பதயுகம்= இருதிருவடிகள்.

மிடவிய= விரைந்து செல்லும். வரிஅளி= கோடுகளையுடைய வண்டு. குமுறி= முரன்று. இடறிய= மோதிய. மதுரகுங்குமத்தூள். இமசலம்= பனிநீர். விரகம்= காமம். வனிதை= வள்ளிநாயகி. இடிபடு= முழக்கப்பெறும். இடம் அற= எல்லாவிடத்தும். அடல்= போர். மொய்ம்பன்= வலியவன். தூற்றிய= சிதறிய. கடதட வழுவை= மதச்சுவடு உடைய யானை. கருணையின் முதிய= முதிர்ந்த கருணையுடைய. தம்பி= இளையவன் - முருகன். பார்ப்பதி= பார்வதிதேவி. அணை= மெத்தை. களி= பெருமகிழ்ச்சி. கடி= நறுமணம். தருவின் இறைமகள்= கற்பகமரத்துக்குரிய இந்திரன் மகள் - தெய்வயானையம்மை. கொண்கன்= கணவன். குரிசில்= ஆண்களுட்சிறந்தவன்.

**பொழிப்புரை :** விரைந்து செல்வதும், கோடுகளையுடையதுமாகிய வண்டுகள் முரன்று மோதுவதும், தேனுடன் கூடிய மகரந்தத்தூள் மூடியதும், பனிநீர் ஒழுகுவதுமாகிய மாலைசூடிய காமம் சுரக்கும் கனத்த தனங்களுடைய வள்ளிநாயகியைத் தன் மனத்தில் கொண்டவனை, முழங்கப்பெறும் முரசும் முழவும் முழங்க, எதிர்த்துப் போரிடும் அசுரர்படை போர்க்களம் எங்கும் இடமற இறந்துகிடக்க, முதிய கழுகுகள் நடனமிடப் போர்புரியும் வலிமையுடையவனை, சிதறிய மதச்சுவடு உடைய யானைமுகக்கடவுளுக்கு இளவலை, பார்வதிதேவியின் கைகளாகிய மெத்தையில் துயில்வதில் மிக்க மகிழ்ச்சிபெறும் குதலை மொழிபேசும் மகனை, மணம்கமழும் மலர்கள் நிறைந்த வானுலகக் கற்பக மரத்துக்குரிய அரசனான இந்திரன்மகள் தெய்வயானையம்மை யுடன் புதுவகைக்கலவியில் முழுகும் அவள்கணவனை, உலகு போற்றும் கலைமகள் பரவும் குமரனை, இனிய கவிதை தரும் ஆண்களுட்சிறந்தவனைக் காத்தருள்க என்று;

வளைந்த உடம்புடைய மூன்றாம்பிறை, கங்கையாறு, நாகம் உடைய தொங்கும் சடைக்காடு உடையவரை; உமைஅம்மையின் முலைகள் குழையத்தழுவிய புனிதரை; சொற்களால் தன்னைப் போற்றும் தொண்டர்களைக் காக்கின்றவரை; மீன்களுடன் அலைஎறியும் கடலில் தோன்றிய மிகக்கொடிய நஞ்சினைக் கழுத்தளவில் நிறுத்தியவரை; மணிகளையுடைய பொன்னாலான சிலம்பு ஒலிக்க ஒருமுறை பவுரி என்ற அழகிய சிறந்த நடனமாடியவரை; மேருமலையின் முதுகு மிகவும் நெளிய அதைவில்லாக வளைத்து, திருமாலாகிய அம்பினைக் கோத்தவரை; அஞ்ஞானக் குடி இருப்பாகிய முப்புரங்களை எரிக்கக் குற்றமற்ற முழுநிலவில் எழும் ஒளிபோல் நகைத்தவரை; திருமேனி தாங்கிய வடிவும் உடையவரை; வடமொழியும் தமிழ்மொழியும் வளம்பெறச் செய்தவரை; மதுரைக்கு இறைவனாம் வெள்ளியம்பலத்தாரின் மணங்கமழும் இருதிருவடிகளைப்போற்றுவாம்.

## 3. உமையம்மை.

அரிபிரமர் சந்ததம் புகழ்ந்திடு பரசுடைய நம்பர்பங் கின்மென்கொடி
அகிலலோகமும் ஆதரத்தால் படைத்தவள்
அரிவைமட மங்கைமென் கனங்குழை திரிபுரைகங் கைஅம்பிகை
அகளமாய்அனு பூதியில்பூத் தபொற்கொடி
அபினவைமு குந்தர்தங் கைசுந்தரி உரகபண பந்திகொண்ட கங்கணி
அமுதமூறிய பாடலுக்கேற் றசொற்குயில்
அறுசமய மும்கலந் துநின்றவள் மறலிபர வும்ப்ரசண் டசங்கரி
அழகெலாம்இது தான்எனப்போற் றுசித்ரம்
முரிபுருவ வஞ்சிதிங் கள்தங்கிய திருமுக மலர்ந்தபைங் கருங்கிளி

முதல்விபூரணி ஞானவித் தாய்க்கிளைத்தவள்
முருகுவிரி கொந்தளம் பிறங்கிய மணிமவுலி மண்தலங்கொள் செஞ்சடை
முடிமனோன்மணி வாலைவற்றாக் குணக்கடல்
முகிழ்முலை சுமந்துநொந்(து) அசைந்(து)இறும் இறும்எனம ருங்(கு)இன்புறு
முறுவலாடிய கோமளத்தால் பெருத்தவள்
முறைமுறைமு ழங்குகின் றகிண்கிணி பரிபுரம்அ லம்புசெம் பதம்புரை
முளரிநாண்மலர் வாழ்(வு)எனப்போற் றிநிற்குதும்
உரியபதி னெண்கணங் களும்சது மறைமுனிவ ரும்பரிந் துநின்கழல்
உறுதிதாஎன நாஎடுத்(து)ஏத் திநித்தலும்
உளமிகம கிழ்ந்துசெங் கரங்களின் மலர்கொடுவ ணங்கிஅஞ் சல்என்றெமை
உடையாய்அருள் நீஎனக்காத் தநட்பனை
உடுமுக(டு)அ திர்ந்துவிண் தலங்களும் அரியபகி ரண்டமும்பிளந்திட
உதறுதோகைம யூரனைத்தோற் றமுற்றெழு
உபநிடத மந்த்ரதந் திரம்தனில் அசபையில் அடங்குமைம் புலன்களில்
உவகைகூரும னோகரக் கூத்தனைப்பொரு
தரியலர்நெ ருங்குசெங் களம்புகு நிசிசரர்து ணிந்தவெம் பறந்தலை
தழுவுபாடல்வி சாகனைப்பாற் கடல்தரு
தரளநகை செங்கருங் கண்இந்திரை குறமகள்ம ணம்புணர்ந்த திண்புய
சயிலமோகன மார்பனைத்தோட்(டு) இதழ்ப்பொதி
தழைமுகையு டைந்துவிண்(டு) அரும்பிய புதுநறவு சிந்துபைங் கடம்பணி
தருணசீதள வாசனைக்கோட் டகத்(து)உயர்
சரவணம் இலங்கவந் தகந்தனை முருகனைவி ளங்குசெந் தில்வந்திடு
சமரமோகன வேலனைக்காத்(து) அளிக்கவே.

**குறிப்புரை** : சந்ததம்= எப்போதும். பரசு= மழுப்படை. நம்பர்= சிவபிரான். ஆதரம்= அன்பு. அகளம்= கள்ளமின்மை.. அனுபூதி= ஞானம். அபினவை= பின்னமாகாதவள். உரகபணபந்தி= படவரிசை கொண்ட நாகம். மறலி= யமன். பாசண்டம்= உக்கிரம். முரி= வளைவு. பைங்கருங்கிளி= கருணை யுடைய கருமையான கிளிஒத்தவள். முருகு=நறுமணம். கொந்தளம்= கூந்தல். வாலை= இளம்பருவம். மணிமவுலி= இரத்தினக் கிரீடம். மண்தலம்கொள்= நிலத்தில்பட்ட. மனோன்மணி= பார்வதி. முகிழ்= அரும்பு. மருங்கு இறும் இறும்= இடுப்புஒடிந்துவிடும் ஒடிந்துவிடும். கோமளம்= அழகு. முறைமுறை= அடுத்தடுத்து. பரிபுரம்= சிலம்பு. அலம்பு= ஒலிக்கும்.

சதுமறை= நால்வேதம். கழல்உறுதி= திருவடி யாகிய வீடுபேறு. நட்பன்= நண்பன். முகடு=உச்சி. பகிரண்டம்= பேரண்டம். தந்திரம்= நூல்.அசபை= வெளிப்படாது மனத்துள்ளேயே செபித்தலுடைய மந்திரம். மனோகரம்= மகிழ்ச்சி. தரியலர் நிசிசரர்= பகைவர் ஆகிய அரக்கர். துணிந்த= வெட்டிய. பறந்தலை= போர்க்களம். பாடல்= பாணிப்பாடல். தரள நகை= முத்துப்பல். இந்திரை= தெய்வயானை. மோகனம்= அழகு. பொதிதழைமுகை= பருத்துச் செழித்த மொட்டு. தருணம்= புதுமை. கோடு= மலை. சமர மோகன வேலன்= போர்விரும்பும் வேலுடையவன்.

**பொழிப்புரை** : தக்க பதினெண் கணங்களும், நால்வேதமும், மறைவல்ல முனிவர்களும் விரும்பி, “ உனது திருவடியாகிய வீடுபேறு தந்தருள் “ என்றுசொல்லி நாடோறும்ஏத்தி,மனம்மகிழ்ந்து தமது செங்கரங்களால் மலரிட்டு வணங்கி “ எம்மை உன்உடைமையாக உடையவனே ! அருள்புரிக “ என்று வேண்ட, அவர்களைக் காத்த நண்பனை; விண்மீன்களின் உச்சி அதிர்ந்து, வானுலகங்களும் சிறந்த பேரண்டமும் பிளக்க, தனது தோகையை உதறும் மயில்உடையவனை, வெளிப்பட்டெழுந்த உபநிடத மந்திரநூல்கள், அசபா மந்திரம் ஆகியவற்றில் அடங்கிக்கிடக்கும் நம்ஐம்புலன்களால் மகிழ்ந்து, மகிழ்ச்சிக் கூத்தாடுகிறவனை; போரிடும் அசுரராகிய பகைவர் செறிந்த போர்க்களமெங்கும் அவர்களின் தலைகளை வெட்டிய கொடிய போர்க்களம் பற்றிய பாணிப்பாடலுக்குரிய விசாகனை; பாற்கடல்தந்த முத்துப்போன்ற பற்களும், கருணையால் சிவந்து, மைஎழுதப்பெற்றதால் கரிய கண்களுடைய தெய்வயானையம்மை, வள்ளிநாயகி ஆகியோரை மணந்த திண்ணிய மலைபோன்ற தோள்களும் அழகிய மார்பும் உடையவனை; தோட்டுடன் கூடிய இதழ்களால் பொதியப்பெற்ற மொட்டுகள் பிளந்து விரிந்து அரும்பிய புதுத்தேன் சிந்தும் வளமான கடப்பமலர்களால், புதியகுளிர்ந்த

மணம்பரவும் மலைக்கண் அமைந்த சரவணம் பொலிவுபெற வந்த கந்தனை; முருகனை; செந்தில் வந்த போர்விரும்பும் புகழ்விளங்கும் வேலனைக் காத்துக் கருணை புரிய;

திருமால் நான்முகன் ஆகியோர் நாடோறும் புகழும்மழுப்படை தாங்கிய சிவபிரானின் இடப் பாகம்கொண்ட மென்கொடியும்; அனைத்துஉலகங்களையும் அன்பினால் படைத்தவளும்; அரிவையும், இளம்மங்கையும், கனமான குழையணிந்த மென்மையான திரிபுரைஅணங்கும்; கங்கைக்குரிய அம்பிகையும்; கள்ளமின்றி ஞானத்தில் தோன்றிய பொற்கொடியும்; பின்னமில்லாதவளும்; திருமாலின் தங்கையும்; அழகியும்; வரிசையாகப் படங்களுடைய பாம்பினைக் கங்கணமாகக் கொண்டவளும்; அமுதம் ஊறும் பாடலைப் பாடுதற்கேற்ற குரலுடைய குயிலும்; ஆறுசமயங்களிலும் கலந்தவளும்; யமனும் துதிக்கும் உக்கிரமான சங்கரியும்; இதுதான் அழகுஎன்று போற்றப்பெறும் அழகியும்; வளைந்த புருவமுடைய வஞ்சிக்கொடியும்; நிலவே வந்து தங்கியதுபோன்ற அழகிய திருமுகத்தில் மலர்ந்த கருணையுடைய கருங்கிளியும்; முதல்வி, பூரணி, ஞானவித்தாய்த் தோன்றியவள், நிலம்தொட்டு மணம்பரப்பும் செஞ்சடைக்கூந்தலில் இரத்தினகிரீடம் சூடியவள், பார்வதி, இளமை வற்றாதகுணக்கடல், அரும்பிய முலைசுமந்ததால் நொந்து அசைந்து ஒடிந்துவிடும் ஒடிந்துவிடும் என்று இடுப்பு வருந்த இன்புற்றுப் புன்முறுவல் பூத்த பேரழகி, நடக்கும்போது அடுத்தது முழங்கும் கிண்கிணியும் சிலம்பும் ஒலிக்கும் செந்தாமரைமலர் ஒத்த திருவடியினள் என்று போற்றப்பெறும் உமையவளைப் போற்றுவோம்.

**பொழிப்புரை :** தனது பதினெண் கணங்களும்,நன்குவேதமுனிவரும் உன்திருவடியாகிய அருளைத்தந்தருள் என்று நாடோறும் சொல்லி மனம்மிகமகிழ்ந்து தத்தம் செங்கரங்களால் மலர் தூவிவணங்கி, அஞ்சல் என்றுகூறி, எம்மை உன்சொத்தாகக் காத்தருள் நீ என்றுவேண்டக் காத்தருளிய நண்பனை; விண்மீன்களின் உச்சி அதிரவும், வானுலகங்களும் அரிய அண்டமும் பிளக்குமாறும் உதறும் தோகை மயிலுடையவனை: அழகுடன் தோன்றி எழுந்த உபநிடத மந்திரக்கிரியையிலும் அசபாமந்திரத்திலும் அடங்கும் நம்ஐம்புலன்களால் மகிழ்ச்சியுறும் அழகிய கடவுளை; போரிடும் பகைவர்களாகிய அசுரர்கள் செறிந்துபுக, துணிவுடன் நின்றதன் போர்க்களம் பற்றிய பாடல்கள்பெற்ற விசாகனை, பாற்கடல் தந்தமுத்துப் பற்கள், செவ்வரிபடர்ந்த கரியவிழிகளுடைய தெய்வயானையம்மை, குறவர் மகளாகிய வள்ளிநாயகி ஆகியோரை மணந்த வலிமையான மலைஒத்த தோள்களுடன் அகன்ற அழகிய மார்புமுடையவனை; தொகுதியான மலரிதழ்களால் பொதியப்பெற்ற, செழித்த மொட்டுகள் மலர்ந்து அரும்பிய புதுத்தேன் சிந்தும் வளமான கடம்பமலர்களுடன், புதிய சந்தனம் கமழும் மலையில் சரவணப்பொய்கை விளங்கத் தோன்றிய கந்தனை; முருகனை; புகழ்விளங்கும் திருச்செந்தூரில் எழுந்தருளிப் போரினை விரும்பிய வேலனைக் காக்கஎன்று;

திருமால், நான்முகன் ஆகியோர் எப்போதும் புகழும்மழுப்படைதாங்கிய சிவபிரானின் இடப்பாகம்தங்கிய மென்கொடி, அனைத்து உலகங்களையும் அன்பினால் படைத்தவள், அரிவை, என்றுமே இளம்பெண், கனமான காதணி அணிந்தவள், திரிபுரை, அணங்கு, கங்கையம்பிகை, திருஉருத்தாங்கி அனுபூதியில் தோன்றியவள், என்றுமே புதியவள், திருமாலின் தங்கை, சுந்தரி, படமுடைய பாம்பினைக் கங்கணமாகக் கட்டிக்கொண்டவள், மிகஇனியபாடலுக்கு ஏற்ற குரலுடைய குயில், ஆறுசமயங்களிலும் கலந்து நின்றவள், எமனும் வணங்கும் வலிமையுடைய சங்கரி, அழகெலாம் இவளது அழகே என்று போற்றும் அழகி, வளைந்த புருவமுடைய வஞ்சிக்கொடி, முழுநிலா வந்து தங்கியதொத்த அழகிய திருமுகத்தால் கருணையுடன் நோக்கும் கருங்கிளி, முதல்வி, பூரணி, ஞானவித்தாய்க் கிளைத்தவள், மணம்பரவும் கூந்தலில் விளங்கும் அழகிய சுருளான செங்குழலுடைய மனோன்மணி, இளமைவற்றாக் குணக்கடல், அரும்பிய முலைகளுடன் அசைந்து நொந்து ஒடியும் ஒடியும் என்று இடுப்புவருந்த இன்பம்தரும் புன்முறுவல்பூத்த மிக்க அழகி, நடக்கும்போது அடுத்தடுத்து முழங்கும்கிண்கிணியும் சிலம்பும் அணிந்த அவளது சிவந்த தாமரை ஒத்ததிருவடிகளைஎமது வாழ்வாகப் போற்றுவோம். ( 3 )

**4. கணபதி.**

கருணையின் வழிபடு முதியவள் தனைஉயர்
கயிலையின் ஒருமுறை உய்த்தக ருத்தினர்
கனவட கிரிமிசை குருகுல மரபினர்
கதைதனை எழுதிமு டித்தக ருத்தினர்
கலைமதி யினைஇரு பிளவுசெய்(து) ஒருபுடை
கதிரெழ நிறுவிய ஒற்றைம ருப்பினர்
கடுநுகர் பரமனை வலமுறை கொடுநிறை
கனிகவர் விரகுள புத்திமி குந்தவர்
பொருவரும் இமகிரி மருவிய பிடிபெறு
பொருகளி(று) எனமிகு பொற்புவி ளைத்தவர்
பொதிஅவிழ் நறுமலர் அணைமிசை தம(து)உடல்
புளகம்அ(து) எழஒரு சத்தித ரித்தவர்
பொதுவற விடுசுடர் முழுமணி ஒளிவிடு
பொலி(வு)எழு பவளம தித்தநி றத்தினர்
புகர்முகம் உடையவர் குடவயி(று) உடையவர்
புகழ்இரு செவியில்நி றுத்திவ ழுத்துதும்
இருமையும் உதவிய சிவபர சமயமும்
இமையவர் உலகும்அ ளித்தக ளிப்பனை
இசைமுரல் மதுகரம் முறைமுறை பெடையுடன்
இடறிய முகைவிரி செச்சைவ னப்பனை
இளகிய புளகித மலைமுலை அரமகள்
இலகிய புலவிஅ கற்றும ழுப்பனை
இகல்புரி பரநிசி சரர்குல கலகனை
எனைவழி அடிமை படைத்திடு நட்பனை
அருமறை உரைதரு பிரமனை அமரரும்
அடிதொழ இடுசிறை விட்டதி றத்தனை
அடியவர் கொடுவினை துகள்பட நடமிடும்
அழகிய சரணம்அ ளித்தவ ரத்தனை
அளவறு கலவியின் முழுகிய குறமகள்
அழகினில் ஒழுகிஇ ருக்கும்ம யக்கனை
அலைஎறி திருநகர் மருவிய குமரனை
அறுமுக முருகனை நித்தல்பு ரக்கவே.

**குறிப்புரை** : முதியவள்= முதிர்ந்த ஔவையார். கருணையின் உயர்கயிலையில்........ வடகிரி= மேருமலை. கதை= மாபாரதம். முறை வலம்கொடு= முறைப்படி வலம்வந்து. விரகு= நுட்பம். இமகிரி மருவியபிடி= இமயமலை தந்த பார்வதிதேவி. புளகம்= பூரிப்பு. ஒருசத்தி= ஒப்பற்ற சத்தி புத்தியரை. பொதுவற சுடர்விடு= எவ்விடத்தும் ஒளிரும். மதித்த= போன்ற. புகர்= புள்ளி. குடவயிறு= பருத்த வயிறு. நிறுத்தி= நிற்கச்செய்து - கேட்டு. இருமை= இம்மை மறுமை. முரல்= ஒலிக்கும். மதுகரம்= வண்டு. இடறிய= மோதிய. செச்சை= வெட்சிப்பூ. அரமகள் தெய்வயானை யம்மை. இளகிய புளகித= மென்மையான பருத்த. மழுப்பன்= இங்கிதமாக நயமாகப் பேசுகிறவன். பர= அந்நியரான கலகன்= கேடுசெய்கிறவன். சரணம்= திருவடி. ஒழுகி= சென்று.

**பொழிப்புரை** : இம்மை மறுமை நலன்கள் உதவுகிற கௌமார சமயத்தையும், தேவருலகத்தையும் தன்னை வழிபடுகிறவர்க்கு அளித்த களிப்பு உடையவனை, ஒலிக்கும் வண்டுகள் அடுத்ததுத் தன்பெண்வண்டுகளுடன் மோதியதால் மலர்ந்த வெட்சிப்பூச் சூடிய அழகனை, மென்மையான பூரித்த முலைகளுடைய தெய்வயானையம்மையின் புலவியை நீக்க இங்கித மொழியில் நயமாகப்பேசுகிறவனை, பகைமையுடைய அந்நியரான அரக்கர்குலத்துக்குக் கேடனை, என்னை வழிவழி அடிமைப்படுத்தும் நண்பனை, அரியவேதங்களை அருளிய நான்முகன் கால்களைத் தேவர்கள் தொழ அவனைச் சிறைவிட்ட ஆற்றலுடையவனை, அடியவர்களின் கொடியவினைகள் தூளாக நடனமாடும் தனது அழகிய திருவடிகளை அவர்கட்குத் தந்த மேலானவனை, தன்னுடன்

அளவற்ற கலவியின் முழுகிய வள்ளிநாயகியின் அழகில் சென்று மயங்கியவனை, அலைவீசும் செந்தில்நகரில் எழுந்தருளியுள்ள முருகனைக் காக்கும்பொருட்டு;

தன்னை வழிபட்ட முதிர்ந்தவளான ஔவையாரை ஒருபோது கருணையுடன் கயிலையில் விட்டதன்மையுடையவர், கனத்த மேருமலையில் குருகுலத்தவரின் கதையான பாரதத்தை எழுதி முடித்த கருத்துடையவர், ஒளியுடைய பிறைநிலவை இரண்டாக ஒடித்து ஒன்றினை ஒளிபொருந்திய ஒற்றைமருப்பாகக் கொண்டவர், நஞ்சுண்ட சிவபிரானை முறைப்படி வலம் வந்து கனிபெற்ற நுட்பமான அறிவு மிக்கவர், ஒப்பற்ற இமயமலையில் தோன்றிய பெண்யானையாகிய பார்வதிதேவி பெற்ற போர்வல்ல ஆண்யானையாகப் பொலிவுமிக்கவர், மணக்கும் மலர்மெத்தையில் தனது உடல் பூரிக்க ஒப்பற்ற சத்திகளாகச் சத்தி புத்திகளைப் பெற்றவர், எல்லாவிடத்தும் ஒளிவீசும் முழுமணிப் பொலிவுடன் விளங்கும் பவளம் போன்ற நிறத்தினர், புள்ளிகளுடைய முகத்தினர், மிகப்பருத்த வயிறு உடையவர் ஆகிய விநாயகரின் புகழை இருசெவிகளாலும் கேட்டு மனத்தில் நிறுத்தி நாள்தோறும் வணங்குவோம். ( 4 )

5. **கலைமகள்.**

அவனி பருகிய மால்திரு உந்தியில்
அமரும் ஒருபிர மாஎனும் அந்தணன்
அரிய சதுமறை நாவில்இ ருந்தவள்
அளவில் பலகலை ஓதிஉ ணர்ந்தவள்
தவள முளரியில் வாழ்வுபு ரிந்தவள்
தவள மணிவட மாலைபு னைந்தவள்
தவள வடிவுள வாணிசு மங்கலி
தனது பரிபுர பாதம்இ றைஞ்சுதும்
உவரி முதுதிடர் பாயவி டம்பொதி
உரகன் மணிமுடி தூள்பட மந்தரம்
உலைய வெறிசுழல் மாருதம் எங்கணும்
உதறு சிறைமயில் வாகனன் இன்புறு
கவர்இல் வரிவளை சூல்கொடு தங்கிய
கமட முதுகினில் ஏறநெ டுந்திரை
கதறு கடல்அலை வாய்முரு கன்பெறு
கருணை தருகவி மாலைவி ளங்கவே,

**குறிப்புரை** : அவனி பருகிய= உலகினை உண்ட. தவளமுளரி= வெண்டாமரை மலர். தவளம்= வெண்மை. முதுதிடர்= பெரிய மணல் மேடு. உரகன்= ஆதிசேடனாகிய பாம்பு. உலைய= வருந்த. வெறிசுழல் மாருதம்= மூர்க்கத்தனமாகச் சுழன்று வீசும் காற்று. சிறை= சிறகு. கவரில்= வெடிப்பில். கவரில் சூல்கொடு தங்கிய கமடம் முதுகினில் வரிவளை ஏற. கமடம்= ஆமை. கதறுகடல்பெறு அலைவாய். கதறு= முழங்கும். அலைவாய்= திருச்செந்தூர்.

**பொழிப்புரை** : மயில்வாகனனின் மயில் தன்சிறகினை உதறியதால் ஏற்பட்ட மூர்க்கத்தனமான சுழல்காற்றால் கடற்கரை மணல்மேடு சிதறிப் பாய, அதுபட்டு விடம்பொதிந்த ஆதிசேடனின் மணிமுடி தூள்பட, மந்தரமலை வருந்த, பாறைப்பிளவில் கடும்சூல்காரணமாகத் தங்கிய ஆமையின் முதுகில் கோடுகளுடைய சங்கு ஏற உள்ள, நீண்ட அலைகள் முழங்கும் திருச்செந்தூர் பெற்ற முருகன் கருணையொடு தரும் பாமாலை சிறந்துவிளங்க;

உலகினை உண்ட திருமாலின் உந்தித்தாமரையில் அமரும் நான்முகனாகிய அந்தணனின் அரிய நான்மறைஓதும் நாவில் இருந்தவளும், பலகலைகளையும் ஓதியுணர்ந்தவளும், வெண்டாமரையில் வாழ்ந்தவளும், வெண்முத்துமாலை அணிந்தவளும், வெண்ணிறத்தவளும் ஆகிய கலைமகளாம் சுமங்கலியின் சிலம்பணிந்த திருவடிகளை வணங்குவோம். ( 5 )

6. **அரிகரபுத்திரன்.**

வரியும் நீள்சடி லத்திடை மகுட ராசித ரித்தவர்
வளையும் நீடுக ருப்புவின் மதுர வாளிதொ டுத்தவர்
அரிய பூரணை புட்கலை அரிவை மார்இரு பக்கமும்

அழகு கூரும்ம கிழ்ச்சியர் அடிவி டாமல்வ ழுத்துதும்
உரிய நான்மறை நித்தலும் உறுதி யாகவ ழுத்திய
உவகை ஆசுக வித்துறை உதவு நாவலன் முற்றிய
பரிய வாளைகு தித்தெழு பரவை சூழுந கர்க்(கு)இறை
பழநி வேலவ னைப்புகழ் பனுவல் மாலைத ழைக்கவே.

**குறிப்புரை** : வரியும்= இறுகமுடித்த. மகுடராசி= மகுடவகை. கருப்பு வில்= கரும்பு வில். . மதுரவாளி= தேன்பொருந்திய மலரம்பு. தொடுத்தவர்= மன்மதன். விடாமல்= தொடர்ந்து. முற்றிய= முதிர்ந்த. பரவை= கடல்.

**பொழிப்புரை** : ஓதுதற்குரிய நால்வேதத்தை நாடோறும் இடைவிடாமல் ஓதிய மகிழ்ச்சி காரணமாக உரியவர்க்கு உவகையுடன் ஆசுகவிவகைகள் அனைத்தையும் அருளிய நாவலனும், பழநி வேலனும், முதிர்ந்த பருமனான வாளைமீன் துள்ளிஎழுந்து குதிக்கும் கடல்சூழ்ந்த திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவனுமாகிய இறைவனைப் புகழும் பாமாலை செழிக்க;

இறுகமுடித்த நீண்டசடையில் மகுடவகை சூடியவரும், வளைக்கின்ற கரும்பு வில்லில் தேன்பொருந்திய மலரம்புகளைத் தொடுத்த மன்மதன் போன்ற அழகரும், சிறந்த பூரணை, புட்கலை ஆகியமனைவியர் இருபக்கங்களிலும் இருக்க அதனால் அழகுமிக்க மகிழ்ச்சியராயுள்ள அரிகரபுத்திரரின் திருவடிகளைத் தொடர்ந்து வணங்குவோம் .

7. **பகவதி .**

விளையும் செழுந்தேன் உடைந்துமுகை விண்டொழுகு வெண்தா மரைப்பொகுட்டு
வேதா முடித்தலை முடிக்கும் சடாடவியள் வெங்கொலை மடங்கல்ஏறி
வளையும் பனிப்பிறை மருப்புக் குறுங்கண்நெடு மயிடாசு ரன்சிரத்தில்
வலிய நடமிடுகுமரி பகவதிச ரோருக மலர்த்தாள் வணக்கமுறுவாம்
உளையும் தடந்திரைத் திமிரதம ரக்குழி உவர்ப்(பு)அறா மகரவேலை
ஒலியிடும் குண்டகழி சுவறிமே டாகவேல் உள்ளுறை கழித்து நிருதக்
களையும் களைந்துகலன் அணிபுலோ மசைதன்மங் கலநாண் அளித்தபெருமாள்
கடிமயில் வாகனப் பெருமாள் உவந்(து)எனது கவிமாலை கொண்டருளவே.

**குறிப்புரை** : முகை உடைந்து விண்டு விளையும்.....ஒழுகு. முகை= மொட்டு. வேதாமுடித்தலை முடிக்கும்= நான்முகனின் முடிசூடிய ஐந்தாவது தலையைக் கெடுக்கும். சடாடவி= சடைக்காடு. மடங்கல்= ஆண்சிங்கம். சரோருகம்= தாமரைமலர். உளையும்= வருந்தும். திமிரம்=ஆற்றல். தமரக்குழி= முழங்கும் ஆழமான. வேலை= கடல். குண்டகழி= ஆழக் கிடங்கு சுவறி= வற்றி. வேல் உள்ளுறை= வேலின் ஆற்றல். கழித்து= வெளிப்படுத்தி. புலோமசை= இந்திராணி. கடி= விரைவு.

**பொழிப்புரை** : வேலின் ஆற்றலை வெளிப்படுத்தி, பெரிய அலைகளின் ஆற்றலுடன் முழங்குவதும் ஆழமானதும் உப்புத்தன்மை நீங்காததும் மீன்கள்மிக்கதுமாகிய கடலின் நீரினால் முழங்கும் ஆழக்கிடங்கு முற்றாகவற்றச்செய்து வெறுந்தரையாக்கியவனும், அசுராகிய களையினைக் களைந்து அணிகலன் அணிந்து, வருந்தும் இந்திராணியின் மங்கலநாண் காத்தவனும், விரைந்துசெல்லும் மயில்வாகனமுடையவனுமாகிய பெருமான் என்கவிமாலையைச் சூடியருள;

உண்டான வளமான தேனால் மொட்டு உடைந்து பிளந்து ஒழுகும் தேனுடைய வெண்டாமரையின் பொகுட்டில் வாழும் நான்முகனின் முடிசூடிய ஐந்தாவது தலையைக் கெடுத்த சடைக்காடுடையவள், கொடிய கொலைபுரியும் ஆண்சிங்கத்தின் ஏறி, வளைந்த வெண்மையான பிறைபோன்ற மருப்பும், குறுகிய கண்களும் உடைய பெரிய மயிடாசுரன் தலையில் வலிமையான நடனமிடும் குமரிஆகிய பகவதியின் தாமரைமலர் போன்ற திருவடிகளை வணங்குவோம். ( 7 )

8. **காளி.**

காயும் கொடும்பகைத் தாருக விநாசனி காபாலிகங் காளிநீலி
காளிமுக் கன்னிஎண் தோளிமா தரிவீரி கவுரிகலை ஊர்திகன்னி
பாயும் தழற்புரைப் பாலைக் கிழத்திவெம் பண்ணம் பணத்திமோடி
பரசுதர னுடன்நடனம் இடுசூலி சாமுண்டி பாதார விந்தம் நினைவாம்
ஆயும் பெரும்பனுவல் ஆசுகவி மதுரகவி அரியசித் திரகவிதைவித்
தாரகவி இடும்முடிப் புக்(கு)உளம் மயங்காமல் அடியவர்க்(கு)

( அருள்குருபரன்
தேயும் பனிப்பிறைத் திருநுதல் கடல்மகளிர் தெண்ணித்தி லம்கொழித்துச்
சிற்றில்விளை யாடல்புரி யும்திருச் செந்தில்வரு சேவகன் புகழ்பாடவே.

**குறிப்புரை** : காயும்= அழிக்கும். விநாசினி= கொன்றவள். கலையூர்தி= மானினை ஊர்தியாகவுடையவள். புரை= ஒத்த. வெம்பணம்= கொடியபாம்பின்படம். மோடி= காட்டினுக்குரியவள். பரசுதரன்= மழுப்படையுடைய சிவபிரான். இடும்= தரும். தேயும் பனிப்பிறை=குளிர்ந்த மூன்றாம் பிறை. கடல் மகளிர் = நெய்தல் நிலப்பெண்டிர். கொழித்து= வாரிஎடுத்து. சேவகன்= வீரன்.

**பொழிப்புரை** : நினைந்து போற்றத்தக்க சிறந்த கவிதைகளாகிய ஆசுகவி,மதுரகவி. அரிய சித்திரகவி, வித்தாரகவி ஆகியனதரும் முடிப்பாகிய வேண்டுதலுக்கு மனம் மயங்காமல் அடியவர்களுக்கு அருளும் குருபரனும், குளிர்ந்த தேய்ந்த மூன்றாம்பிறை ஒத்த அழகிய நெற்றியுடைய நெய்தல்நிலப்பெண்டிர் வெண்மையான முத்துகளை வாரிஎடுத்துச் சிற்றில் விளையாடும் திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள வீரனுமாகிய முருகன் புகழ்பாட;

அழிக்கும் கொடியபகைக்குணமுடைய தாருகனைக் கொன்றவளும்; காபாலி, கங்காளி, நீலி, முக்கண்ணி, எட்டுத் தோளினள், மாதரி,வீரி, மானூர்தியுடையவள், கன்னி, விரைந்துசுடும் நெருப்புப் போன்ற பாலைநிலத்துக்கு உரியவள், கொடியபாம்பின் படம்போன்ற உறுப்புடையவள், காட்டினுக்கு உரியவள், மழுப்படையுடைய சிவபிரானோடு சூலமுடன் நடனமாடியவள் சாமுண்டி ஆகிய காளிதேவியின் திருவடித்தாமரைகளை நினைந்து வணங்குவோம்.

9. **ஆதித்தர்.**

வெள்ளப் பெருந்துளி இறைக்கும் பெருங்காற்று வெண்திரையின் மூழ்கிஎழு
வெம்புரவி ஒற்றைஆ ழித்தடந் தேரேறி வேதபா ரகர்இறைஞ்சப்
பள்ளக் கடல்திரை கலக்கிஊ ழியின்இருள் படலம்முழு தும்துடைத்து
படர்சுடர் விரித்துவரு பன்னிரு பதங்கர்பொற் பாதமலர் சென்னிவைப்பாம்
உள்ளக் களிப்(பு)அறா வரிவண்டு பண்பாட ஓதிமம் நடிக்க உள்வாய்
உள்குடக் கூன்வலம் புரிமுத்தம் உமிழநீ ரோடையில் குருகுகாணக்
கள்ளக் கருங்கண் சிவந்தவாய் வெண்ணகைக் கடைசியர் நுளைச்சியர்உளம்
களிக்கூரும் அலைவாய் உகந்தவே லனைஎங்கள் கந்தனைக் காக்கவென்றே.

**குறிப்புரை** : வெள்ளம்= மிகுதி. எழு= தோன்றும். ஆழி= சக்கரம். வேத பாரகர்= வேதங்களைப் படிப்பிப்போராகிய பிராமணர். ஊழியின்= ஊழிக்காலம்போன்ற. பதங்கர்= ஆதித்தர். பண்= இசை. ஓதிமம்= அன்னப்பறவை. குட உள்வாய்= குடம்போன்ற உள்ளிடம். கூன்= வளைந்த. குருகு= நாரை. கடைசியர்= உழத்தியர். நுளைச்சியர்= நெய்தல்நிலப்பெண்டிர். கள்ளக்களி= பொய்யான களிப்பு. **பொழிப்புரை** : வரிகளுடைய வண்டுகள் மனக்களிப்பு நீங்காது இசைபாட, அன்னப்பறவை நடனமாட, குடம்போன்ற உள்ளிடமுடன் வளைந்த வலம்புரிசங்கு முத்தினை உமிழ, இவற்றை நீரோடையில் உள்ள நாரை பொய்யாகக்காண; இவற்றால் மைதீட்டியகண்,சிவந்த உதடு,வெண்பற்கள் கொண்டஉழத்தியரும் நெய்தல்நிலப்பெண்டிரும் மிக்கமனமகிழ்ச்சி கொள்ளும் செந்தூரில் விருப்புடன் எழுந்தருளியுள்ள வேலனை, எமது கந்தனைக் காக்கவென்று;

மிகுந்த பெருந்துளிகளை வாரி இறைக்கும் பெருங்காற்றுடன் கூடிய வெண்மையான அலையில் மூழ்கியநிலையில் இருந்து எழுந்து வெப்பமாகிய குதிரைகள் இழுக்கும் ஒற்றைச் சக்கரமுடைய தேரில் ஏறி, வேதங்களைப் படிப்பிப்போராகிய பிராமணர் வழிபட, ஆழமானகடலினை அலைகளால் கலக்கி, படரும் ஒளிவிரித்து, ஊழிக்காலத்தது போன்ற இருட்படலம் முழுவதையும் நீக்கிவரும் பன்னிருசூரியர்களின் அழகிய திருவடிமலர்களைத் தலைக்கண் சூடுவோம். ( 9 )

10. **முப்பத்துமுக்கோடி தேவர்கள்.**

பொதுவில் ஆடும் அத்தர்க்கு நீடு பொருளை ஓதி ஒப்பித்த சீலர்
புணரி தோய்ந கர்க்குச்ச காயர் புலமை நீதி ஒப்பற்ற கேள்வர்
குதலை வாய்மொ ழிச்சத்தி பாலர் குருதி பாய்க திர்க்கொற்ற வேலர்
குறவர் பாவை சொற்கத்தின் மோகர் குமரர் காவ லுக்(கு)ஒத்த காவல்
மதுர கீத விற்பத்தி வாணர் மகுட வேணி முத்(து)உத்த ரீகர்
மவுன மோன பத்திக்க லாபர் மனையில் வாழ்வு வைப்புற்ற நேயர்

முதுமை யான சொல்பெற்ற நாவர் முனிவர் வேள்வி இச்சிக்கும் ஊணர்
முடிவி லாத கற்பத்தின் ஊழி முதல்வர் தேவர் முப்பத்து மூவரே.

**குறிப்புரை** : பொதுவில்= சபையில் - அம்பலத்தில். நீடுபொருள்= ஓங்காரம் ஒப்பித்த= ஒப்புமாறு செய்த. புணரி= கடல். நகர்=திருச்செந்தூர். கேள்வர்= உரியவர். கொற்றவேலர்= வெற்றிவேலேந்தியவர். குறவர் பாவை= வள்ளிநாயகி. சொற்கம்= கொங்கை. ஒத்த= ஏற்ற. விற்பத்தி வாணர்= அறிவால் வாழ்பவர். முத்து உத்தரீகம்= மேலான மேலாடை - அங்கவஸ்திரம். மவுன மோனம்= மவுனமாகிய மோனத்தில். பத்தி= அன்பை. கலாபர் மனையில்= மயிலுடைய முருகனின் இருப்பிடத்தில். முதுசொல்= பழஞ்சொல். ஊண்= அவிஉணவு. கற்பத்தின் ஊழி= கற்பகாலத்து முடிவான ஊழி.

**பொழிப்புரை** : இனிமையாகப் பாடும் அறிவால்வாழ்பவர், சடையில் மகுடமுடன் மேலான மேலாடை அணிந்தவர், மவுனமாகிய மோனநிலையில் தமது அன்பை மயிலுடைய முருகனின் இருப்பிடத்தில் வைத்த வாழ்வினர், பழஞ்சொல் பேசும்நாவினர், முனிவர்கள் விரும்பும் வேள்வி அவியுணவை விரும்புகிறவர், எல்லையற்ற கற்பகாலத்து முடிவான ஊழிக்காலத்துக்கு முதல்வர் ஆகிய முப்பத்து முக்கோடி தேவர்கள்;

அம்பலத்தில் ஆடும் சிவபெருமானுக்கு ஓங்காரப்பொருளை, அவர் ஒப்புக்கொள்ளுமாறு சொன்ன சீலர், கடலுடைய திருச்செந்தூர் நகருக்கு நன்மைஅருள்கிறவர், புலமையிலும் நீதியிலும் ஒப்பற்ற உரிமையுடையவர், பராசத்தியிடம் குதலைமொழி பேசுகிற இளவயதினர், குருதி ஒழுகும் வெற்றிபொருந்திய வேலேந்தியவர், வள்ளிநாயகியின் கொங்கைகளில் பெருவிருப்பர் ஆகிய முருகனின் காவலுக்கு ஏற்றவராவர்.

## 2. செங்கீரைப் பருவம்.

கீர்= சொல். செவ்விய மழலைச்சொற்களைப் பேசும் பருவம். இப்பருவத்தின் செயலாவது குழந்தை குப்புறப்படுத்த நிலையில் ஒருகாலை மண்டியிட்டு ஒருகாலை நீட்டி, இருகைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்ந்து முகமசைய ஆடுதல் - தவழமுயலும்நிலை.

**************

1. வெங்காள கூடவிடம் ஒழுகுபல் பகுவாய்
விரித்துமா சுணம்உ மிழ்ந்த
வெங்கதிர் மணிக்கற்றை ஊழிஇரு ளைப்பருக
வேய்முத்(து) உதிர்ந்து சொரியச்
கங்காளர் முடிவைத்த கங்கா நதிக்கதிர்
கடுப்பக் குறுங்கவைக் கால்
கவரியின் பருமுலைக் கண்திறந்(து)
கதிர்வெயில் படமு ரிந்து
மங்காமல் இரசதத் தகடெனச் சுடர்விட
மலைக்குறவர் கண்டெ டுத்து
வண்தினைக்(கு) எருவிடும் சாரலின் கரியகுற
மகளிர்உளம் ஊச லாடச்
செங்காவி விழிபருகு பன்னிருகை மேகமே
செங்கீரை ஆடி அருளே
திரைஎறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை ஆடி அருளே.

**குறிப்புரை** : வெங்காளகூட விடம்= கொடிய கரியநஞ்சு.. மாசுணம்= பாம்பு. வேய் முத்து= மூங்கிலில் விளைந்த முத்து. கங்காளர்= முழுஎலும்புக்கூட்டு மாலை அணிந்த சிவபிரான். கதிர்= ஒளி. கடுப்ப= ஒப்ப. கவரி= முடியுடைய எருமை. கதிர் வெயில்= ஞாயிற்றின் வெப்பம். முரிந்து= வற்றிக்காய்ந்து. இரசதத்தகடு= பொன்தகடு. ஊசலாட= மகிழ.

**பொழிப்புரை** : ஆதிசேடன் தனது கொடியவிடமொழுகும் பற்களுடைய வாய்பிளந்து துப்பிய நாகரெத்தினத்தின் ஒளி ஊழிக்காலத்து இருளைப்பருகவும், மூங்கில் முற்றிமுத்துகளைச் சொரியவும், குறுகிய பிளவுகொண்ட குளம்புடைய கவரிமா தனது முலைக்கண்கள் திறந்துகொண்ட காரணத்தால், எலும்புக்கூட்டு மாலையணிந்த சிவபிரான் தலையில் தரித்த கங்கைநீர் போல்

தூயஒளியுடைய பாலினைச் சொரிய, அது ஞாயிற்றின் வெப்பத்தால் வற்றிக்காய்ந்து தங்கத்தகடு போல் இருப்பதைக் குறவர்கள் கண்டெடுத்து வளமான தினைப்பயிருக்கு உரமாக இடவும், மலைச்சாரலில் வாழும் கருநிறக் குறமகளிர் மனம் மகிழவும், நம் குவளைமலர் விழிகளால் அழகைப்பருகும் பன்னிருகைகொண்ட சிவந்த மேகமே ! செங்கீரை ஆடியருள்க. அலையெறியும் திருச்செந்தூரின்கண் விரும்பி எழுந்தருளியுள்ள வேலனே ! செங்கீரை ஆடியருள்க. ( 11 )

2. கறைகொண்ட முள்ளயிற் றுத்தி வரிஉடல்
கட்செவிப் பஃறலை நெடுங்கண்
காகோத ரச்சிர நெளிக்கவட பூதரம்
கால்சாய மகரம் எறியும்
துறைகொண்ட குண்டகழ்ச் சலராசி ஏழும்
சுறுக்கெழ முறுக்(கு) எயிற்றுச்
சூரன்ப யம்கொளச் சந்த்ரசூ ரியர்கள்செந்
தூளியின் மறைந்தி டத்திண்
பொறைகொண்ட சுரர்மருவு அண்டகோ ளகைமுகடு
பொதிரெறிய நிருதர் உட்கப்
பூச்சக்ர வாளகிரி கிடுகிடென வச்சிரப்
புருகூதன் வெருவி வேண்டும்
திறைகொண் டளக்கவரு மயிலேறு சேவகா
செங்கீரை ஆடி அருளே
திரைஎறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை ஆடி அருளே

**குறிப்புரை** : கறை= நஞ்சு. முள் எயிறு= கூர்மையான பல். கட்செவி= கண்ணையே காதாகக் கொண்டது. பஃறலை= பலதலைகள் - ஆயிரம்தலைகள். நெடும் கண்= நீண்ட உடம்பு. காகோதரம்= ஆதிசேடனாகிய பாம்பு. வடபூதரம்= நீண்ட மேருமலை. கால்சாய= அடிவளைய. குண்டகழ்ச் சலராசி ஏழும்= ஆழமான ஏழுகடலும். சுருக்கு எழ= வற்ற. முறுக்கு எயிற்று= வளைந்த பல். தூளி= புழுதி. பொதிர் எறிய= துளைபட.. உட்க= அஞ்ச. பூச்சக்ரவாளகிரி= பூமியைச் சூழ்ந்துள்ள மலை. புருகூதன்= இந்திரன். திறை= அரசுஇறை - கப்பம். சேவகா= வீரனே.

**பொழிப்புரை** : நஞ்சுடையதும், முள்போல் கூரிய பற்களுடையதும், படப்புள்ளிகள் உடையதும், கண்ணையே காதாகக்கொண்டதும், ஆயிரம்தலைகளுடையதும், நீண்ட உடம்புடையதும், ஆகிய ஆதிசேடன் தலை நெளிக்கவும், மேருமலையின் அடி வளையவும், மீன்களை எடுத்தெறியும் துறைகள்கொண்ட ஆழமானகடல் ஏழும்வற்றவும், வளைந்த பற்களுடைய சூரன் அஞ்சவும், சந்திரனையும் சூரியனையும் செம்புழுதி மறைக்கவும், வலிய பொறுமையுடைய தேவர்கள்வாழும் அண்டத்து உச்சி துளைபடவும், அசுரர்கள் அஞ்சவும், பூமியைச் சூழ்ந்துள்ள சக்ரவாளமலை கிடுகிடுக்கவும், வச்சிரப்படையுடைய இந்திரன் அச்சங்கொண்டு வேண்டுமளவு அரசிறை அளக்கவும் வருகின்ற மயில்மேல் அமர்ந்த வீரனே ! செங்கீரை ஆடிஅருள்க. அலைவீசும் கடலுடைய திருச்சீரலைவாய்க்கண் விருப்புடன் எழுந்தருளியுள்ள வேலனே ! செங்கீரை ஆடியருள்க. ( 12 )

3. ஏர்கொண்ட பொய்கைதனில் நிற்கும்ஒரு பேரரசின்
இலைகீழ் விழிற்ப றவையாம்
இதுநிற்க நீர்விழில் கயலாம்இ தன்றிஓர்
இலைஅங்கும் இங்கு மாகப்
பார்கொண்ட பாதியும் பறவைதான் ஆகஅப்
பாதியும் கயல தாகப்
பார்கொண்டி ழுக்கஅது நீர்கொண்டி ழுக்கஇப்
படிகண்ட(து) அதிச யம்என
நீர்கொண்ட வாவிதனில் நிற்கும்ஒரு பேழ்வாய்
நெடும்பூதம் அதுகொண் டுபோய்
நீள்வரை எடுத்(து)அதன் கீழ்வைக்கும் அதுகண்டு

நீதிநூல் மங்கா மலே
சீர்கொண்ட நக்கீர னைச்சிறை விடுத்தவா
செங்கீரை ஆடி அருளே
திரைஎறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை ஆடி அருளே

**குறிப்புரை** : ஏர்= அழகு. அரசு= அரசமரம். கீழ்= தரை. அங்கும் இங்குமாக= தரையிலும் நீரிலுமாக. அதிசயம் என= ( திருப்பரங்குன்றப் பஞ்சாக்கரப்பாறையில் சிவபூசையில் இருந்தநக்கீரர் கண்டு) இது அதிசயம் என்று சொல்ல. பேழ்வாய்= பிளந்தவாய். சீர்= புகழ். கொண்டுபோய்= பூசையில் தவறிய குற்றத்திற்காகக் கொண்டுபோய். கீழ்= அடிப்பக்கக் குகை. ( திருப்பரங்குன்றப் புராணத்தில் இச்செய்தியை விரிவாகக் காணலாம் )

**பொழிப்புரை** : திருப்பரங்குன்றத்து அழகிய பொய்கையில் நிற்குமோர் பெரிய அரசமரத்தின் இலை, தரையில் விழுந்தால் அதுபறவையாய்விடும். இதுதவிர அது நீரில் விழுந்தால் கெண்டைமீனாய்விடும். ஒர் இலை தரையில் பாதியும் நீரில் பாதியுமாகவிழ, தரையில் விழுந்த பாதி பறவையாகி, நீரில் விழுந்தபாதி மீனாகி ஒன்றையொன்று தரைக்கும் நீருக்கும் இழுக்க, இதனைப் பஞ்சாக்கரப்பாறையில் சிவபூசையில் ஈடுபட்டிருந்த நக்கீரர் கண்டு அதிசயிக்க, தவநிலை குலைந்ததால் அவரைஅக்குளத்தில் இருக்கும் பிளந்தவாயினையுடைய பூதம், மலையைத்தூக்கி மலைக்கீழுள்ள குகையில் அடைத்ததுகண்டு, திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரரை அறநூல் மங்காமல் சிறைவிடுத்தவனே ! செங்கீரை ஆடியருள்க. அலையெறியும் அலைவாயினை விரும்பி எழுந்தருளியுள்ள கூரியவேலேந்தியவனே ! செங்கீரை ஆடியருள்க. **( 13 )**

**4.** கந்தமலி நெட்டிதழ்க் குறுமுகைப் பாசடைக்
கமலமல ரைக்க றித்துக்
கடைவாய் குதட்டும் புனிற்றெருமை தன்குழக்
கன்றுக்(கு) இரங்கி ஓடிக்
கொந்தவிழ் கருங்குவளை ஓடைத்த டாகக்
குரம்பைக் கடந்து செந்நெல்
குலைவளைக் கும்பழக் குலைமடல் கதலிக்
குருத்(து)அற மிதித்து மீளப்
பந்தரிடு சூல்அடிப் பலவுதரு முட்குடப்
பழமெலாம் இடறி வெள்ளைப்
பணிலம்சொ ரிந்தநித் திலம்உறுத் தப்பதை
பதைத்து முலைப்பால் உடைந்து
சிந்தமக ராழிஅலை யொடுபொருத செந்தூர
செங்கீரை ஆடி அருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற்ப தாகையாய்
செங்கீரை ஆடி அருளே.

**குறிப்புரை** : கந்தம்= நறுமணம். பாசடை= பசிய இலை.கறித்து= கடித்து. புனிற்று= ஈன்றணிமை வாய்ந்த, கொந்து= பூந்தாது. குரம்பு= செய்கரை. ஓடைத்தடாகம்= நீரோடையுடன் கூடிய பெரியகுளம். குரம்பு= செய்கரை. வளைக்கும்= சூழ்ந்த. கதலி= வாழை. அறமிதித்து= கெட மிதித்து. சூலடிப்பலவு= வேர்ப்பலா. இடறி= தட்டப்பட்டு. பணிலம்= சங்கு. பொருத= மோத.

**பொழிப்புரை** : மணம்மிக்க நீண்ட இதழ்களும் சிறியமொட்டும் பசிய இலைகளும் உடைய தாமரைமலர்களைக் கடித்து, கடைவாயில் குதட்டும் இளங்கன்றுடைய எருமை, தனது இளங்கன்றை நினைத்து இரங்கி ஓடி, பூந்தாதுடைய குவளைமலர்மலர்ந்த நீரோடையுடன்கூடிய பெரியகுளத்துச் செய்கரையினைக் கடந்து, குலையாக விளைந்த நெல்லுடைய நிலத்தைச் சூழ்ந்த பழக்குலைகளுடன் கூடிய வாழைப் புடைக்கன்றுகளின் குருத்துகள் கெடமிதித்து மீண்டு, பந்தல்போல் தழைத்த வேர்ப்பலாவின் முட்களுடைய குடம்போன்ற பலாப்பழங்கள்மோத, வெண்மையான சங்குகள் சொரிந்த முத்துகள் காலை இடறியதால் மனம்பதைத்து முலைக்கண் திறந்துபொழிந்தபால் மீன்களுடைய கடல்அலைகளுடன் மோதும் திருச்செந்தூரனே செங்கீரையாடி அருள்க. செந்நிறக் குடுமி யுடைய வெண்ணிறச்சேவற்கொடியுடையவனே செங்கீரையாடி அருள்க. **(14 )**

5. வீறாட வெங்கதிர்ப் புகர்முகக் கூரிலை
மிகுத்தவேல் உறைக ழித்து
வெவ்வாய் பிளந்துசிறு கட்பே ரிடாக்கினிகள்
விளையாட வெங்க வந்தம்
மாறாட முதுபகட்(டு) உயர்பிடர்க் கரியநிற
மறலிஇரு கைச லித்து
மன்றாட உடல்விழிக் குரிசில்கொண் டாடநெடு
மாமுகட்(டு) இடைவெ ளியறப்
பாறாட அம்பொற் கிரீடம் பரித்(து)அலகை
பந்தாட விந்(து)ஆ(டு) அவிப்
பாலைக் கிழத்திமுக் கவரிலைச் சூலம்
பசுங்கொழுங் குருதி வெள்ளச்
சேறாட வென்றுசிறு முறுவலா டும்குமர
செங்கீரை ஆடி அருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற்ப தாகையாய்
செங்கீரை ஆடி அருளே.

**குறிப்புரை** : வெங்கதிர்ப் புகர்முகக் கூர் இலைமிகுத்தவேல் உறைகழித்து வீறாட= மிக்க ஒளிவிடும் முகமுடையதும், மிகக்கூர்மையான இலைவடிவினதும் ஆகிய வேலின் ஆற்றல் வெளிப்பட்ட வெற்றிமிகுதியால் . இடாக்கினி= பிணம்தின்னும் பேய். வெம்கவந்தம்= சினம்மிக்க தலையற்ற முண்டம். மாறாட= நிலைகெட்டுக்கூத்தாட. முதுபகட்டு= மூத்த எருமை. மறலி= எமன். மன்றாட= இயலாமை கூறிமிக வேண்ட. உடல்விழிக்குரிசில்= உடம்பெல்லாம் கண்களுடைய இந்திரன் . இடைவெளியறா நெடுமாமுகடு பாறாட= இடைவெளியில்லாத நீண்ட அண்டத்தின் உச்சி சிதற. பாறு ஆட= பருந்துகள் விளையாட.பரித்து= கையில் தாங்கி.. அவிப்பாலை= எரிக்கும் பாலைநிலம். கிழத்தி= கொற்றவை. கவர்= பிளவு. சூலம்= சூலத்தால். சிறுமுறுவல்= புன்முறுவல்.

**பொழிப்புரை** : மிக்கஒளிவிடும் முகமுடையதும், கூர்மையானை இலைவடிவினதும் ஆகிய வேலின் ஆற்றல் வெளிப்பட்ட வெற்றிமிகுதியால், தமதுகொடிய வாய்பிளந்து சிறுகண்ணுடைய பிணம் தின்னும் பேய்கள் விளையாட, சினம்மிக்க தலையற்ற முண்டங்கள் நிலைகெட்டுக் கூத்தாட, மூத்த எருமையின் பிடரில் ஏறிவரும் எமன் தன்கைசலித்ததால் உயிர்கவர இயலாமைகூறி வேண்ட, உடம்பெல்லாம் கண்களுடைய இந்திரன் கொண்டாட, இடைவெளி இல்லாத நீண்ட அண்டத்தின் உச்சி சிதற, பொன்னாலான அழகியகிரீடத்தைக் கையில் தாங்கிப் பேய்கள் பந்தாட, எரிக்கும் பாலைநிலத்துக்கு உரிய கொற்றவையின் முத்தலைச் சூலம்பெருக்கிய புதிய, மிகுந்தகுருதிவெள்ளத்தால் நிலம் சேறாக, பகைவரை வென்று புன்முறுவல் பூக்கும் குமரனே செங்கீரை ஆடிஅருள்க. செந்நிறக்குடுமியுடைய வெண்ணிறச் சேவற்கொடியுடையவனே செங்கீரை ஆடி அருள்க. ( 15 )

6. மகரசல ராசிதனில் வருணன்வந்(து) அடிபரவி
வைத்தமணி முத்து மாலை
வடபூத ரத்தில்விழும் அருவினன உத்தரிக
மார்பில்ஊ டாட மன்னும்
தகரமலர் இதழ்முருகு கொப்புளிக் கும்சிகைத்
தமனியச் சுட்டி ஆட
தவளமுழு மதிஅமுத துளிஎனத் திருமுகத்
தரளவெயர்(வு) ஆட முழுதும்
பகரவரு மறைமுனிவர் கொண்டாட மழுவாளி
பங்காளி திருமு லைப்பால்
பருகக்கு ழைந்தசிறு பண்டியும் தண்டையும்
பாதமும் புழுதி ஆடச்
சிகரவரை அரமகளிர் சிறுமுறுவல் ஆடநீ

செங்கீரை ஆடி அருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற்ப தாகையாய்
செங்கீரை ஆடி அருளே.

**குறிப்புரை** : மகரசலராசி= மீன்கள் நிறைந்த கடல். மணிமுத்து= அழகியமுத்து. வடபூதரம்= வடக்கில்உள்ள மேருமலை. உத்தரிக மார்பு= மேலாடை அணிந்த மார்பு. தகரம்= மயிர்ச்சாந்து. முருகு= நறுமணம். சிகை= தலைமுடி. தமனியச்சுட்டி= பொன்னாலான நெற்றிச் சுட்டி. தரள வெயர்வு= முத்துப்போன்ற வியர்வைத் துளி. மறைமுழுதும் பகரவரு முனிவர். மழுவாளி= மழுப்படை ஏந்திய சிவபிரான். பங்காளி= இடதுபங்கை ஆளும் பார்வதி தேவி. பண்டி= வயிறு. வரைசிகர அரமகளிர்= மலையுச்சியில் வாழும் தேவமகளிர்.

**பொழிப்புரை** : மீன்களுடைய கடலுக்கதிபதியாகிய வருணன் வந்து கால்களில் விழுந்து வணங்கிக் காணிக்கையாக வைத்த அழகிய முத்துமாலையானது வடக்கில் உள்ள மேருமலையில் இருந்து இறங்கும் அருவியைப்போல் மார்பினூடே ஆட, பெருமைபொருந்திய மயிர்ச்சாந்து, மலரிதழ் ஆகியவற்றின்மணம் வீசும் முன்தலைமுடியிலிருந்து பொன்னாலான நெற்றிச் சுட்டி ஆட, வெண்மையான முழுநிலவின் அமுததுளிபோல் அழகிய முகத்தில் வியர்வை முத்துகள் ஆட, மறைஓதவரும் முனிவர்கள் கொண்டாட, சிவபிரானின் இடதுபாகத்துக்குரிய பார்வதி தேவியின் திருமுலைப்பால் பருகும்பொருட்டுக் குழைந்த சிறிய வயிறும், தண்டையும், பாதமும் புழுதியாட, மலையுச்சியில் வாழும் தேவமகளிர் புன்முறுவல் பூக்க நீ செங்கீரை ஆடியருள்க. செந்நிறக்குடுமி யுடைய வெண்மையான சேவற்கொடியுடையவனே செங்கீரை ஆடியருள்க. **( 16 )**

**7.** வேறு

இந்திர னும்சசி யும்பர வும்படி இங்கே வந்தார்காண்
இந்திரை யும்கர சங்கமு குந்தனும் இந்தா வந்தார்பார்
அந்தண னும்கலை மங்கையும் நின்சர ணம்சேர் கின்றார்போய்
அண்டரு டன்பல தொண்டர்ப ணிந்தனர் அஞ்சேல் என்(று)ஆளாய்
முந்துத டந்திரை உந்துவ லம்புரி மொண்டே கொண்டேக
முன்றில்தொ றும்தர ளங்கள்உ மிழ்ந்திட முந்தூர் நந்தூரும்
செந்தில்வ ளம்பதி வந்தரு ளும்குக செங்கோ செங்கீரை
தென்றல்ம ணம்கமழ் குன்றுபு ரந்தவ செங்கோ செங்கீரை.

**குறிப்புரை** : சசி= இந்திராணி. இந்திரை= திருமகள். முகுந்தன்= திருமால். அந்தணன்= நான்முகன். ஆளாய்= ஆண்டருள்வாயாக. முந்து= விரைந்துவந்த. உந்து= எற்றிய. முந்தூர்= முதன்மையான ஊர். நந்து= சங்கு. குன்று= பொதிகை..

**பொழிப்புரை** : இந்திரனும் இந்திராணியும் இங்கு வந்தனர், திருமகளும் சங்கேந்திய திருமாலும் இங்கே வந்தனர். நான்முகனும் கலைமகளும் உன்திருவடிகளை வணங்குகின்றனர். தேவர்களுடன் பலதொண்டர்களும் உன்னை வணங்கினர். அனைவரையும் அஞ்சாதீர் என்று ஆண்டருள்வாயாக. விரைந்துவந்த பெரியஅலை முன்எற்றியவலம்புரிச் சங்கினைக் கொண்டு செல்ல, முதன்மையான அவ்வூரின் வீட்டுமுற்றங்கள்தோறும் ஊரும் சங்குகள் முத்துகளை ஈனுகின்ற திருச்செந்தூராகிய வளமான ஊரில் எழுந்தருளியுள்ள குகனே செங்கோசெங்கீரை. தென்றல் கமழும் பொதிகைக்குன்றினை உக்கிரகுமார பாண்டியனாய்க் காத்தவனே செங்கோ செங்கீரை ( **17 )**

**8.** வரைபொரு புளகிதம் அலைமுலை அரிவையர் வந்தார் பந்தாட
மறிகடல் இறைதரு நவமணி வடம்அது வண்(டு)ஆர் தண்தார்பார்
உரைபெறு கவிஞரும் முனிவரும் அமரரும் உன்போல் உண்டோதான்
உரைஎமர் வழிவழி அடிமையி(து) உளதென உன்பால் அன்பானார்
கரைபொரு கடல்திட் ரெழமயில் மிசைவரு கந்தா செந்தூரா
. கழிமட அனமொடு முதுகுரு(கு) ஒருபுடை கண்சாய் தண்கானல்
திரைபொரு திருநகர் மருவிய குருபர செங்கோ செங்கீரை
செருவினில் எதிர்பொரு நிசிசரர் தினகர செங்கோ செங்கீரை.

**குறிப்புரை :** வரைபொரு= குன்றுபோன்ற. புளகிதம்= பூரிப்பு. அலை= குலுங்கும். மறிகடல்= சுருண்டுவிழும் அலைகளுடையகடல். இறை= வருணன். தண்தார்= குளிர்ச்சியான மலர்மாலை. உரைபெறு= புகழ்வாய்ந்த. உரை= சொல்க. எமர்= எம்மவர். திடர்= தீவு. மயில் எழ. கழிமட அனம்= மிக இளைய அன்னப்பறவை. முதுகுருகு= முதுமையான நாரை. கண்சாய்= உறங்கும். கானல்= கடற்கரைச் சோலை. செரு= போர்.

**பொழிப்புரை :** குன்றுபோல் பூரித்துக் குலுங்கும் முலைமகளிர் பந்தாடவந்தனர். சுருண்டுவிழும் அலைகளுடைய கடலுக்கு இறைவனாகிய வருணன் காணிக்கையாகச் செலுத்திய நவமணி வடத்துடன், வண்டுகள் ஆரவாரிக்கும் தண்ணிய மலர்மாலைகள் பார்த்தருள். புகழ்வாய்ந்த கவிஞரும் முனிவரும் அமரரும் " அருள்வதில் உன்போல் பிறர் யாருமுண்டோ ? எம்மவர் அனைவரும் உனக்கு வழிவழி அடிமை, உன்மேல் அன்புடையவராயினர். " என்றுகூறி வேண்டுவர். கரையில் மோதும் அலைகளுடைய கடல்நடுவே பசிய தீவுஎழுந்ததுபோல் மயில்மேல்வரும் கந்தனே ! திருச்செந்தூரனே ! மிக்க இளைய அன்னப்பறவையுடன் வயதில் முதுமையான நாரை உறங்கும் கடற்கரைச் சோலைகளுடைய அலைகள் மோதும் அழகிய நகரில் எழுந்தருளியுள்ள மேலான குருவே ! செங்கோ செங்கீரை. போர்க்களத்தில் எதிர்த்துப் போரிடும் அசுரர்களாகிய இருளுக்கு அதனை அழிக்கும் கதிரவனே ! செங்கோ செங்கீரை. **( 18 )**

**9.** உரைசெய் வரையர மகளிர் முறைமுறை உன்பேர் கொண்டாட
உலகும் இமையவர் உலகும் அரகர உய்ந்தோம் என்றாட
வரைசெய் வனமுலை மகளிர் எழுவரும் வந்தே பண்பாட
மலய முனியொடு பிரம முனிதொழ வந்தார் கண்டாயே
கரையின் மணலிடு கழியின் நெடியக லம்சே ரும்சார்பில்
கரிய முதுபனை அடியில் வலைஞர்க ணம்சூழ் மென்கானில்
திரையில் வளைதவழ் நகரில் வருகுக செங்கோ செங்கீரை
செருவில் நிசிசர திமிர தினகர செங்கோ செங்கீரை.

**குறிப்புரை :** உரைசெய்= புகழும். முறைமுறை= மேன்மேலும். வரைசெய்= குன்றுஒத்த. வனம்= அழகு. மகளிர் எழுவர்= சப்தகன்னியர். மணல் இடு கழி= மணலால் அமைந்த உப்பங்கழி. கலம்= மரக்கலம்.

**பொழிப்புரை :** உன்னைப் புகழும் மலைவாழ் தெய்வப் பெண்டிர் மேன்மேலும் உன்புகழைக் கொண்டாட; இவ்வுலகும் தேவருலகும் அரகர என்று உன்னைப்போற்றி நல்வாழ்வு பெற்றோம் என்று கூத்தாட; குன்றுஒத்த அழகியமுலைகளுடைய மகளிர் எழுவரும் உன்பால்வந்து பண்ணிசைக்க; அகத்தியருடன் நான்முகனும் உன்னை வணங்க வந்துள்ளனர் காண். கடற்கரையிலும் மணலால் அமைந்த உப்பங்கழியிலும் நீண்ட மரக்கலம் சேருமிடங்களில் உள்ள கருமையான பனைமரத்தின் அடியிலும், வலைஞர் கூட்டமுள்ள சிறுகாட்டிலும், அலைகளில் சங்குகள் தவழும் நகரத்திலும் வந்துஅருளும் குகனே செங்கோ செங்கீரை. போரில் அசுரராகிய இருளுக்கு அதனை அழிக்கும் கதிரவனே ! செங்கோ செங்கீரை. **( 19 )**

**10.** வேறு

குறுமுகை விண்ட நெட்டிலைத் தாழை அடியில்வி
ளைந்த முட்குடக் காயில் இனிய
குவளை ஓடையில் விண்தோ யும்தேவர்
குணலைபு ரிந்த கற்பகச் சோலை நிழலிடு
பந்தர் இட்டபொன் தூணில் அளவர்
குடிலில் வாசலில் நின்(று)ஓ டும்தோணி
குழுவொடு வந்து விட்(டு)இளைப் பாறு
துறைமணல் வண்டல் இட்டுவற் றாத பழைய
குமிழி வாவியில் வண்டா னம்தாவும்
குரவுநெ ருங்கும் எக்கரில் கானல் உழுநர்ப
ரம்பின் நெற்குலைத் தாளில் இளைய
குமரர் ஊர்சிறு திண்தேர் மென்காவில்

இறுகுகு றும்பை ஒத்தபொற் பார நகிலர்இ
ருந்து வைத்தவைப்(பு) ஊசல் அருகில்
இளைஞர் ஊடலில் வண்(டு)ஆர் தண்தாரில்
எவரும்ம கிழ்ந்த சித்திரச் சாலை நிழல்மணி
துன்று தெற்றியில் தேவர் மகுடம்
இடறு பூமியில் வங்கா ளம்சீனம்
எனமொழி தங்கும் அற்புதத் தீவில் வணிகரின்
வந்த மிக்கபட் டாடை வகையில்
எறியும் ஆரவ டம்பூ ணும்பூணில்
இரைகவர் ஞெண்டு முக்குளித்(து) ஊறும் அளறுகி
டங்கில் வித்துவித்(து)ஆரத் துரவில்
இடுமுள் வேலியில் வெங்கா மன்காண
முறுகவி ளைந்து முற்றிமுத் தேறு கரியக
ரும்பு சுற்றுசிற் றாலை நிலையின்
முதிய தாழியில் வெந்தா றும்பாகின்
முடியைவி ளம்பி வைத்துமுட் டாது கடைசித
ருகின்ற கட்குடப் பானை முதுகின்
முளைகொள் சாலியின் மென்பூ கம்தோறும்
முருகுது ளும்பு கொத்துடைப் பாளை சிதரிஉ
திர்ந்த பித்திகைப் பீட மறுகின்
முதல்வர் தேவியர் பந்தா டும்காவின்
முனிவர் விரும்பு கற்புடைப் பான்மை மகளிர்கள்
மொண்டெ டுத்தகைச் சாலின் மடுவின்
முழுகு மேதியில் வம்பே செஞ்சேல்பாய்
செறுவில்வி ளைந்த நெற்குலைக் காயில் உழவில்உ
டைந்த கட்டியில் பார மதகு
செறியும் ஏரியின் மண்டூ கம்பானல்
செருமிமு ழங்கு கற்பிளப் பான புடையின்வி
ழும்பு னல்பெருக்(கு) ஆன தமர
திமிர வாவியில் எங்கே யுந்தாவும்
திரையில்வ லம்பு ரிக்கணத் தோடு பணிலம்மு
ழங்கு பட்டினக் காவல் திகிரி
முருக வேலவ செங்கோ செங்கீரை
தினகரர் அஞ்ச விட்புலத் தேவர் மகபதி
முன்கு வித்த வித்தார மவுலி
திரைகொள் சேவக செங்கோ செங்கீரை.

**குறிப்புரை : அடி. 1.** குறுமுகை= சிறிய அரும்பு. விண்ட- விரிந்த. குடக்காய்= குடம்போல்பருத்த தாழங்காய். குணலை= ஒருவகைக்கூத்து. சோலை= சோலை( போல ) அளவர்= நெய்தல்நிலத்தார். குழு= கூட்டம். விட்டு= நிறுத்தி. துறை= நீர்த்துறை. மணல்= மண(லின்). வண்டலிட்டு=நீர்ச்சுழியிட்டு. வாவி= குளம். வண்டானம்= நாரைப்பறவை. குரவு= குராமரம். எக்கர்= மணல்மேடு. கானல்= கழிநிலம். பரம்பில்= சமன்செய்த நிலம். ஊர்= செலுத்துகிற. மென்கா= இளஞ்சோலை.

**அடி. 2.** இறுகுரும்பை= கெட்டியான தென்னம் பிஞ்சு. பொன்= அழகிய. நகிலர்= கொங்கையுடைய சிறுபெண்கள். வைப்பு= இருப்பு. நிழல்= ஒளி. மணிதுன்று= இரத்தினங்கள்பதிந்து நெருங்கிய. தெற்றி=திண்ணை. மகுடம் இடறு=கிரீடங்கள் ஒன்றுடன் ஒன்று தட்டுகிற. பூமியில்= (ஆலயத்தின் முற்றமாகிய ) நிலத்தில். வந்த= கொண்டுவந்த. எறியும்= மாதர் ஊடலில் கழற்றிஎறியும். ஆரவடம்= முத்துமாலை. பூணில்= ஊடலில் மாதரைச் சமாதானம் செய்து ஆடவர் சூட்டும் அணியில். ஞெண்டு= நண்டு. முக்குளித்து= அமிழ்ந்து. ஊறும்= நனையும். அளறு= சேற்றையுடைய. வித்து= விதைகளையுடைய. வித்தாரம்= அகலமான. துரவு= தோட்டத்தில் ( ஆகுபெயர் ).

**அடி. 3.** வெங்காமன்= ஆசையோடு மன்மதன். முறுக= மிக. முத்து= சாறு. ஏறு= உயரமான. சுற்று

சிற்றாலை= சுற்றிவந்து சாறுபிழியும் சிறியகரும்பாலை. முடியை= தலையில். விளம்பி= சொல்விளம்பி யாகிய கள்ளினை. முட்டாது= தட்டுப்பாடின்றி. கடைசி= மருதநிலப்பெண். சாலி= நெற்பயிர். முதுகின்= வெளியில். பூகம்= பாக்குமரம். முருகு= தேன். சுவர்த்தலங்களையுடைய ஆசனம். மறுகு= தெரு. முதல்வர்= மும்மூர்த்திகள். பான்மை= தன்மை. கைச்சால்= நீர்இறைக்கும் சிறிய பாத்திரம். மடு= தடாகம் மேதி= எருமை. வம்பே= புதுமையாக. **அடி. 4.** செறு= வயல். செறியும்= நெருங்கும்.ஏரி= பாசனத்துக்குரிய பெரிய நீர்நிலை. மண்டூகம்= தவளை. பானல்= கருங்குவளை மலர். செருமி= இருமி. கற்பிளப்பு= கல்வெடிப்பு. புடையில்= குழியில். தமரம்= பேரொலி.திமிரவாவி= மிக்கநீர். பணிலம்= சங்கு. திகிரி= சந்தனமலை. காவல் திகிரி= காக்கும் ஆணைச்சக்கரம்.தினகரர் அஞ்ச= பன்னிரு சூரியர்களும் ஒளியைக்கண்டு அஞ்ச. திறை= கப்பம் - அரசு இறை. சேவக= வீரனே.

**பொழிப்புரை : அடி. 1.**சிறிய அரும்புகள் விரிந்ததும் நீண்ட இலைகளுடையதும் ஆகிய தாழையின் அடியில், குடம்போன்று பருத்ததும் முட்களுடையதும் ஆகிய தாழங்காயில்,குவளைமலர் களுடைய ஓடையில், கற்பகமர நிழலுடைய வானுலகில் வாழும் தேவர்கள் குணலைக்கூத்ததாடும் சோலை இடங்களில், நிழலுக்காக இட்ட பந்தலின் அழகியதூணில், நெய்தல்நிலத்தவர் குடிலில், அதன் வாசலில் நின்று ஓடும் தோணியில், குழுவாக வந்துசேர்ந்து இளைப்பாறும் நீர்த்துறையில், மணலில் நீர்ச்சுழியிட்டு நீர்வற்றாத பழையகுளத்தில், நாரைப்பறவைகள் தாவிஅமரும் குராமரம் நெருங்கிய மணல்மேட்டில்,கழிநிலத்தை உழுவோர் அதனைச் சமப்படுத்திய நிலத்தில், நெற்குலை யுடைய தாளில், இளங்குமரர் செலுத்திய சிறிய வலியதேர்களுடைய மென்மையான சோலையில், **அடி. 2.** கெட்டியான தென்னம்பிஞ்சு போன்ற அழகிய கொங்கைகளுடைய பெண்கள் ஏறிஆடியபின் நிறுத்திவைத்த வைப்புஊசல் அருகில், இளைஞர் ஊடலில், வண்டுகள் மொய்க்கும் அவரின் தண்ணிய மார்புமாலையில், எத்தகையவரும் கண்டுமகிழ்ந்த ஓவியச்சாலையில், ஒளிபொருந்திய மணிகள் பதிக்கப்பட்ட நிழலுடைய திண்ணையில், தேவர்களின் கிரீடங்கள் தம்முள் தட்டுகின்ற ஆலயத்தின் முற்றத்தில், வங்காளம் சீனம் என்ற மொழிபேசுவோர் தங்கும் அற்புதத்தீவில், வணிகர் கொணர்ந்த மிகுதியான பட்டாடைவகையில், ஊடலால் மகளிர் எறியும் முத்தாரம் மற்றும் அணிகளில், தனது இரையைக்கவர்ந்த நண்டு சேற்றில் அமிழ்ந்து நனையும் சேற்றுக்கிடங்கில், விதை விதைக்கப்பெற்ற அகலமான தோட்டத்தில் இட்ட முள்வேலியில், **அடி. 3.** ஆசையுடன் மன்மதன் காணுமாறு முதிர்ந்து விளைந்ததால் சாறுமிக்க உயரமான கரும்பைச் சாறுபிழியும் சிறிய கரும்பாலை இடத்தில், முதியபானையில் வெந்துஆறும் வெல்லப்பாகில், தலையில் கள்ளுப் பானையை வைத்துக்கொண்டு தட்டுப்பாடின்றி மருதநிலப்பெண் - உழத்தி கள்தரும்கட்குடப் பானையில், மென்மையான முளை வெளிப்பட்ட நெல்லில், பாக்குமரங்கள்தோறும் மென்மையான மணம்பரப்பும் கொத்தான பாளைஉதிர்ந்து சிதறியபித்திகைப் பீடமுடைய தெருவில், மும்மூர்த்திகளின் தேவியர் பந்தாடும் சோலையில், முனிவர்கள் விரும்பும் கற்புத்தன்மையுடைய மகளிர் நீரினை மொண்டு எடுத்த சிறியசாலில், ஆழமானநீரில் முழுகிக்கிடக்கும் எருமையில், **அடி. 4.** கெண்டைமீன்கள் பாயும் நன்செய்நிலத்தில் புதிதாக விளைந்த நெற்கதிர்க்குலையில் உள்ள நெல்மணியில், உழும்போது உடைபட்ட மண்ணாங்கட்டியில், கனமான மதகுகொண்டு அடைத்த ஏரியில், தவளை கருங்குவளை மலரில் இருந்து இருமிமுழங்கும் கற்பிளப்பான பக்கங்களில், விழும் நீர்ப்பெருக்கால் பேரொலிஎழும் நீர்நிறைந்த குளத்தில், எங்கும் தாவிச்செல்லும் அலையில், இவ்விடங்களுடன் வலம்புரிச்சங்கின் கூட்டத்துடன் பிறசங்குகளும் முழங்கும் இடங்கள் என்று எங்குமிருந்து செந்தில்நகரினைக் காக்கும் ஆணைச்சக்கரமுடைய முருகா ! வேலவா ! செங்கோ செங்கீரை. வானுலகத் தேவர்தலைவனான இந்திரன் தன்தலைதாழ்த்திச் சூரியனும் அஞ்சுமாறு ஒளிர்வனவும் உன்முன் குவித்தனவுமாகிய கப்பப்பொருளை - அரசிறையை ஏற்கும் வீரமுடையவனே ! செங்கோ செங்கீரை. **( 20 )**

## 3. தாலப்பருவம்.

தாலப்பருவம்= தாலாட்டுப் பருவம்.
தாலாட்டு= ஒருவகையாக நாவசைத்துப் பாடும் பாட்டு.

**************

1. அடரும் பருநவ மணிமுடி அமரரும் அமரர்க்(கு) இறைவனும்நீ(டு)
அளகைந ராதியும் ஈரொன் பதின்மரும் அருமறை முனிவோரும்

சுடரும் தரும்இரு சுடரும் பரவிய தோகையர் எழுவருமுத்
தொழில்முக் கடவுளும் அவரவர் தம்குறை சொல்லித் துதிசெய்தார்
படரும் கிரணப் பரிதி நெடுங்கதிர் பாயும் பகிரண்டம்
பழுமரம் என்னப் பனைஎன நிமிரும் பாழிக் கைநீட்டி
தடவும் புகர்முகத் தந்திக்(கு) இளையாய் தாலோ தாலேலோ
சந்த மணம்கமழ் செந்திற் பதியாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : அடரும்= நெருக்கமாய்ப் பதித்த. அளகை நராதி= அளகாபுரிஅரசனான குபேரன். ஈரொன்பதின்மர்= பதினெண்கணத்தார். சுடர்= அக்கினிதேவன். இருசுடர்= சூரிய சந்திரர். தோகையர் எழுவர்= ஏழுமாதர் - சப்த கன்னியர். முத்தொழில் முக்கடவுள்= படைத்தல் ,காத்தல், அழித்தல் தொழில்புரியும் நான்முகன், திருமால், உருத்திரன். பகிரண்டம்= பேரண்டம். பழுமரம்= பழம்பழுத்த மரம். பனை= பனைமரம். பாழி= பெருமை. தந்தி= விநாயகர். சந்தம்= சந்தனம்.

**பொழிப்புரை** : நெருக்கமாகப் பதித்த பருத்த மணிகளுடைய திருமுடிசூடிய தேவர்களும்,தேவேந்திரனும், அளகாபுரி அரசனான குபேரனும், பதினெண்கணத்தவரும், அரியமறைவல்ல முனிவர்களும், அக்கினிதேவனும், சூரிய சந்திரரும், போற்றிய ஏழு கன்னியரும்,முத்தொழில் புரியும் முக்கடவுளரும் ஆகிய அனைவரும் தத்தம் குறைகளைக்கூறி வணங்க, படர்ந்து செல்லும் கிரணமுடைய ஞாயிற்றின் நீண்ட கதிர்பாயும் பேரண்டத்தை மரத்தில் பழுத்த பழமாகநினைத்துப் பனைமரம் போல்நீண்ட பெருமைபொருந்திய கையைநீட்டிப்பறிக்கத் தடவும் புள்ளிகளுடைய யானைமுகத்து விநாயகருக்கு இளையவனே ! தாலோ தாலேலோ. சந்தனமணம் கமழும் திருச்செந்தூருக்கு உரியவனே ! தாலோ தாலேலோ. ( 21 )

2. கங்குல் பொருந்திய குவளைக் குழியில் கழியில் பழனத்தின்
கரையில் கரைபொரு திரையில் வளைந்த கவைக்கால் வரிஅலவன்
பொங்கு குறுந்துளி வாடையின் நொந்து பொறாதே வெயில்காயும்
புளினத் திடரில் கவரில் துரவில் புன்னை நறுந்தாதில்
கொங்கு விரிந்த மடல்பொதி தாழை குறுமுள் கரியபசும்
கோலச் சிறிய குடக்கா யிற்புயல் கொழுதும் செய்குன்றில்
சங்கு முழங்கிய செந்தில் பதியாய் தாலோ தாலேலோ
சமய விரோதிகள் திமிர திவாகர தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : கங்குல்= இரவு. பொருந்திய= மலரும். குழி= நீர்நிலை. கழி= உப்பங்கழி. கவை= பிளவு. அலவன்= நண்டு. புளினத்திடர்= மணல்மேடு. கவர்= வெடிப்புநிலம். துரவு= கிணற்றுமேடு. கொங்கு= மணம். கரிய= பெருமைபொருந்திய கொழுதும்= கிண்டும். சங்கு= சங்குப்பூச்சிகள். திமிரம்= இருள். திவாகரன்= சூரியன்.

**பொழிப்புரை** : இரவில் குவளைமலர்கள் பூத்த நீர்நிலையில், உப்பங்கழியில், நன்செய்நிலக் கரையில், கரையில் மோதும் அலையில், வளைந்தும் பிளந்துமுள்ள கால்களுடன் கோடுகளுடைய நண்டுகள் மேன்மேலும் மிகும் சிறுதுளிகளுடன்கூடிய வாடைக்காற்றைப் பொறுக்காமல் வருந்தி வெயில்காய்கிற மணல்மேட்டில், வெடிப்புநிலத்தில். கிணற்றுமேட்டில், புன்னைமரம் சொரிந்த மணமிக்க தாதில், மணம்பரப்பும் மடல்மூடிய தாழையில், பெருமையுடைய பசுமைநிறத்துடன் அழகுடைய சிறிய குறுமுட்களுடைய தாழங்காயில், காற்று வாரிவீசும் செய்குன்றில் முதலிய எவ்விடத்தும் சங்குப்பூச்சிகள் முழங்கும் திருச்செந்தூருக்கு உரியவனே ! தாலோ தாலேலோ . சமயவிரோதிகளாகிய இருளை ஓட்டும் சூரியனே ! தாலோ தாலேலோ. ( 22 )

3.

## வேறு

தண்தேன் ஒழுகும் மொழிமடவார் தாமம் கொழுதிச் சுருண்(டு)இருண்டு
தமரக் களிவண்(டு) அடைகிடந்து தழைத்து நெறித்த குழல்பாரம்
கொண்டே மெலிந்த தல்லாது குரும்பைக் களப முலைசுமந்து
கொடிபோல் மருங்குல் குடிவாங்கா குழையில் குதித்த விழிக்கயலைக்
கண்டே வெருவிக் கயல்மறுகக் ககன எயில்மா ளிகையுடுத்துக்
ககனம் தடவும் கோபுரத்தைக் கருதி வடவெற்(பு) எனக்கதிரோன்
திண்தேர் மறுகும் திருச்செந்தூர்ச் செல்வா தாலோ தாலேலோ

தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த சிறுவா தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : தாமம்= மலர்மாலை. தமரம்= ஒலிக்கும். கொழுதி= கிண்டி. தங்கியிருந்து. குடிவாங்கா= இல்லாமறபோகா - இற்றுப்போகா. மாளிகை ககனஎயில் உடுத்து= மாளிகைகள் வான்உயர்ந்த மதில்சூழ. கோபுரத்தை வடவெற்புஎனக்கருதி. தேர்= தேர்க்குதிரைகள். மறுகும்= மயங்கும்.

**பொழிப்புரை** : தேன்ஒழுகுவதுபோல் இனிக்கப் பேசும் மகளிர் சூடிய மலர்மாலையைக் கிண்டி ஒலிக்கும் கரிய வண்டுகள் களித்து மனம்மயங்கி தலையிலேயே தங்கிய காரணத்தால், முன்னரே தழைத்துச் செழித்த கூந்தலின் கூடுதலான பாரத்தால் அம்மகளிரின் கொடிபோன்ற இடுப்பு இல்லாமற்போனதே தவிர, தென்னங்குரும்பை ஒத்ததும், கலவைச்சாந்து பூசியதுமாகிய முலைகளின்பாரத்தால் இல்லாமற்போகவில்லை. காதணியில் மோதிய கண்களாகிய கெண்டைமீன்களைக்கண்டு குளத்துக் கெண்டைகள் மனம் குழம்ப, வானுயர்ந்த மதில்சூழ்ந்த மாளிகைகளின் கோபுரங்களைக் கண்ட கதிரவனின் தேர்க்குதிரைகள் அவற்றை மேருமலை என்றுகருதி மேற்செல்ல மயங்கும். இத்தகு திருச்செந்தூர்ச் செல்வனே ! தாலோ தாலேலோ. தெய்வயானையம்மையை மணந்த இளைஞனே ! தாலோ தாலேலோ. **( 23 )**

**4.** பாம்பால் உததி தனைக்கடைந்து படரும் கொடுங்கார் சொரிமழைக்குப்
பரிய வரையைக் குடைகவித்துப் பசுக்கள் வெருவிப் பதறாமல்
காம்பால் இசையின் தொனிஅழைத்துக் கதறும் தமரக் காளிந்திக்
கரையின் நிரைப்பின் னேநடந்த கண்ணன் மருகா முகையுடைக்கும்
பூம்பா சடைப்பங் கயத்தடத்தில் புனிற்றுக் கவரி முலைநெரித்துப்
பொழியும் அமுதம் தனைக்கண்டு புனலைப் பிரித்துப் பேட்(டு)எகினம்
தீம்பால் பருகும் திருச்செந்தூர்ச் செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த சிறுவா தாலோ தாலேலோ

**குறிப்புரை** : உததி= கடல். படரும்= தொடரும். வரை= மலை - கோவர்த்தன மலை. காம்பு= மூங்கிலாலான புல்லாங்குழல். தொனி= ஒலி. முகைஉடைக்கும்= மொட்டுகள் மலரும் பூ= அழகு. நெரித்து= வருத்தமுற்று. அமுதம்= பால். பேட்டு எகினம்= பெண் அன்னப்பறவை. தெய்வக் களிறு= தெய்வயானை அம்மை.

**பொழிப்புரை** : திருப்பாற்கடலினைப் பாம்பின் துணைகொண்டு கடைந்தும், கார்மேகம் தொடர்ந்து பொழியும் கொடியமழை காரணமாக வருந்தும் உயிரினங்களைக்காக்கக் கோவர்த்தன மலையைப் பெரிய குடையாகப் பிடித்தும், கதறும் பசுக்கள் அஞ்சிப்பதறாமல் மேயப் புல்லாங்குழல் இசைஒலியால் அழைத்தும், முழங்கும் காளிந்தி நதிக்கரையில் பசுக்களின் பின்னே சென்று மேய்த்தும் செயற்பட்ட திருமாலாகிய கண்ணபிரானின் மருகனே ! அழகிய தாமரை மொட்டுகள் மலரும் பசிய இலைகளுடைய குளத்தில் கிடக்கும் ஈன்றணிமைவாய்ந்த எருமையின் மடி, பாலின் பெருக்கால் வருத்தமுற்றுச் சொரிந்த பாலினைக் கண்டு, பெண்அன்னப்பறவை நீரினைப் பிரித்து இனிய பாலைப் பருகும் திருச்செந்தூச் செல்வனே ! தாலோ தாலேலோ. தெய்வயானை அம்மையை மணந்த குமரனே ! தாலோ தாலேலோ. **( 24 )**

**5.**

**வேறு**

மங்கல மங்கலநூல் எங்கும்மொ ழிந்தனர்காண் வானோர் ஏனோர்போய்
வந்துவ ணங்கினர்மேல் அந்தர் துந்துபிகேள் வார்ஊ(டு) ஆடாதே
கொங்கைசு மந்திடைநூல் அஞ்சும்அ ணங்கனையார் கூடா(து) ஊடாரோ
கொண்டவ ரம்தருவாய் அண்டர்பெ ருந்தவமே கோமான் ஆமாநீ
செங்கம லம்தனிலே பைங்குமு தங்களிலே சேல்பாய் வான்நாடா
தென்றலு டன்தமிழ்தேர் தென்பொதி யம்பதிவாழ் தேன்ஆர் தார்மார்பா
சங்குவ லம்புரிசூழ் செந்தில்வ ளம்பதியாய் தாலோ தாலேலோ
சங்கரி தன்குமரா மங்கையர் தம்கணவா தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : மங்கள மங்கள நூல்= மங்களம்தரும் மறைநூல். மேல்= வானுலகு. வாரூடு= முலைக் கச்சினுள். இடைநூல்= இடுப்பாகிய நூல். கூடாது ஊடாரோ= கூடாமையால்ஊடல்கொள்வர்.

கொண்ட= மனத்தில்கொண்ட. நீ கோமான் ஆமா= நீ கோமானாகுமறு வான்நாடு= மேலான - வளமான பாண்டியநாடு நாடு. சங்கரி= பார்வதிதேவி. மங்கையர்= வள்ளி தெய்வானை.

**பொழிப்புரை** : தேவர்கள் மங்களம்தரும் மறையினை எவ்விடத்தும் போய் ஓதினர் ஏனையோர் வந்து உன்னை வணங்கினர். வானுலகில் வானுலகத் துந்துபிகள் - இசைக்கருவிகள் ஒலிக்கின்றன. கச்சினுள் ஆடாத முலைகளைச் சுமந்த தெய்வமகளிர் ஒத்தவர்கள் உன்னை அடைந்தால் ஊடமாட்டார். தேவர்களின் பெருந்தவத்தால் தோன்றியவனே ! கோமானாகுமாறு நீ நாங்கள் நினைத்த வரம் அருள்வாயாக. செந்தாமரைமேலும் வளமான குமுதமலர்மேலும் கெண்டைமீன்கள் பாயும் வளமான நாடனே ! தென்றலுடன் தேர்ந்த தமிழுமுடைய அழகிய பொதிகைப்பதியில்வாழ் தேன்பொருந்திய மலர்மாலையணிந்த மார்பனே ! சங்குகளும் வலம்புரிகளும் சூழ்ந்த வளமான செந்தில்பதியானே ! தாலோ தாலேலோ. பார்வதிதேவியின் மகனே! வள்ளி தெய்வயானை இருவர் கணவனே ! தாலோ தாலேலோ. ( 25 )

6. **வேறு.**

மரகத வடிவம் செங்கதிர் வரவால் வாகாய் வாடாதோ
மதிமுகம் முழுதும் தண்துளி தரவே வார்வேர் சோராதோ
கரமலர் அணைதந்(து) இன்புறு மடவார் காணாதே போமோ
கனமணி குலவும் குண்டலம் அரைஞா ணோடே போனால்வார்
பொருமிய முலையும் தந்திட வுடனே தாய்மார் தேடாரோ
புரவலர் எவரும் கண்(டு)அடி தொழுவார் போதாய் போதாநீள்
சரவணம் மருவும் தண்டமிழ் முருகா தாலோ தாலேலோ
சதுமறை பரவும் செந்திலை யுடையாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : மரகத வடிவம்= பசியவடிவம். வாகாய்= பக்குவமாக. வேர்தண்துளி தர. வார்சோராதோ= ஒழுகி வடியும். கரமலர் அணைதந்து= கைகளாகிய மலர்களால் தூக்கி. மடவார்= கைத்தாயர் - வளர்க்கும்தாயர். போமோ= போகலாமா .முலை தந்திட= பாலூட்ட. போதாய்= வா. போதா= ஞானியே. நீள்= ஒளி. சதுமறை= நால்வேதம்.

**பொழிப்புரை** : செந்திலானே ! நீ வெளியே சென்றால் உன்னைதேடிஅலையும் தாயின்பசிய வடிவம் செஞ்ஞாயிற்று வெப்பத்தால் பக்குவமாக வாடிவிடும். நிலவுஒத்த உன் முகம் முழுவதும் தண்ணிய வேர்வைத்துளி ஒழுகி வடியும். தாமரைபோன்ற கைகளால் தூக்கி இன்புறும் வளர்ப்புத்தாயர் உன்னைக் காணாது நீ போகலாமா ? பெருமைபொருந்திய மணிகள் பதித்துவிளங்கும் குண்டலம், அரைஞாண் ஆகியவற்றுடன் சென்றால் விம்மிய முலைக்குக் கச்சணிந்த தாய்மார் உனக்குப் பாலூட்ட உன்னைத் தேடமாட்டாரா ? உன்னைக்காப்பவர் அனைவரும் உன்னைக்கண்டதும் உன்அடிதொழுவார். வந்தருள். ஞானியே ! ஒளிபொருந்திய சரவணப்பொய்கையில் தோன்றிய தண்டமிழ்முருகா ! தாலோ தாலேலோ. நால்வேதங்களும் போற்றும் செந்தில்நகருடையவனே ! தாலோ தாலேலோ. ( 26 )

7. **வேறு.**

கூரும்இகல் சாய்த்த வீரா தீரா தார்மார்பா
கூறும்இயல் பார்த்(து)உன் மேலே யாரார் பாடாதார்
மேருவரை நாட்டு வாழ்வார் வான்நா ஆள்வார்போல்
வேளைஎன மீட்(டு)உன் மேலே வீழ்வார் சூழ்வார்பார்
ஆரும்இரை பார்த்து நீள்நீ ரூடே தாராமேய்
ஆன கழிநீக்கி மேலே நாவா யோடேசேல்
சேரும்அலை வாய்க்கு நாதா தாலோ தாலேலோ
தேவர்சிறை மீட்ட தேவா தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : கூரும் இகல்= மிக்கபகைமை. கூறும்இயல்= புகழத்தக்க உன் இயல்பு. வீழ்வார்= விரும்புவார். ஆரும் இரை= உண்ணத்தக்க இரை. மேய் ஆன= மேய்வதற்கான. மேலே செல்= தொடர்ந்து செல்லும்.

**பொழிப்புரை** :அசுரர்களின் மிக்க பகைமையைத்தீர்த்த வீரா ! தைரியம் வாய்ந்தனனே ! மாலையணிந்த மார்பனே ! புகழத்தக்க உன்இயல்பைப்பார்த்து உன்னைப்புகழ்ந்து அனைவரும்

பாடுவர். மேருமலைக்கண் வாழ்பவரும் தேவர்களைப்போல் காலந்தோறும் மீண்டும் உன்னைச் சுற்றிவந்து வணங்குகிறார்கள் பார். உண்ணத்தக்க இரைநோக்கி நீரில்மேய்வதற்குத் தாராப்பறவை செல்லும் உப்பங்கழியை நீக்கி, முன்னேறிச்செல்லும் நாவாயின்பின்னே கெண்டைமீன் செல்லும் சீரலைவாய்த் தலைவனே ! தாலோ தாலேலோ. தேவர்களை அசுரர்களின் சிறையிலிருந்து மீட்ட தேவனே ! தாலோ தாலேலோ ( 27 )

8. **வேறு.**

அரைவடமும் தண்டையும் மின்புரை அரைமணியும் கிண்கிணி யுங்கலன்
அணியும் மாறா வீறார்சீர்
அறுமுகமும் தொங்கல்சு சுமந்தபன் னிருகரமும் குண்டல மும்குழை
அழகும் ஆரார் பாராதார்
விரைபொருமென் குஞ்சிஅ லம்பிய புழுதியும்அங் கம்குழை பண்டியும்
மெலியும் மேலே வீழ்வார்பார்
வெகுவிதமும் கொண்டுத வழ்ந்திடில் அவரவர்தம் கண்கள்ப டும்பிழை
விளையு மேதேன் ஏகாதே
வரைமணியும் தங்கமும் ஒன்றிய கனபரிஅங் கம்தனில் இன்றுகண்
வளர வாராய் வாழ்வேநீ
மணிநகையும் கொண்டுது யின்றிலை விரலமுதம் கொண்டுகி டந்தனை
மதுர மாய்நீ பேசாயோ
திரைபொருதென் செந்தில்வ ளம்பதி வளரவரும் கந்தசி வன்பெறு
சிறுவா தாலோ தாலேலோ
திசைமுகனும் சங்கரி யும்சது மறையுமிறைஞ் சும்பரை அம்பிகை
சிறுவா தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : அரைவடம்= அரைஞாண். அரைமணி= சலங்கை. கலன் அணி= அணிகலன்களின் அழகு. தொங்கல்= மாலை. கரம்= தோள்கள். பாராதார் ஆர் ஆர். விரை பொரு= மணம்பொருந்திய. குஞ்சி= தலைமுடி. அலம்பிய= ததும்பிய. அங்கம்= உடம்பின் மேற்பகுதி - மார்பு. குழைபண்டி= உள்வாங்கிய வயிறு. வீழ்வார்= விரும்புவார். கண்படும் பிழை விளையும்= கண்திருட்டி படும் ஏகாதே= வெளியில் செல்லாதே. வரை மணி= மலையில்பிறந்த மணியும். பரியங்கம்= கட்டில். விரல் அமுதம்கொண்டு= கைசூப்பிக்கொண்டு. பரைஅம்பிகை= பார்வதி தேவி.

**பொழிப்புரை** : நீயணிந்த அரைஞாண், தண்டை, மின்னல்போல் ஒளிரும் சலங்கை, கிண்கிணி ஆகிய அணிகலன்களின் அழகும், மாறாத பெருமை பொருந்திய சிறந்த ஆறுமுகங்களும், மாலையணிந்த பன்னிரண்டு தோள்களும், குண்டலமும், குழையின் அழகும் பாராதவர் யார் . மணம்பொருந்திய மென்மையான தலைமுடியில் ததும்பும் புழுதியும், மார்புக்கு உள்வாங்கி மெலிந்த வயிறும் கண்டு உன்னை அனைவரும் விரும்புவர். பலவகை அணிகளுடன் நீ தவழ்ந்தால் காண்பவர் கண்திருட்டி படும். தேனே ! வெளியில் செல்லாதே. மலைபடு மணிகள்பதித்தபெரியபொற் கட்டிலில்துயில என்வாழ்வே வா. அழகிய முறுவல்பூத்து விரல்சூப்பி உறங்காது படுத்திருக்கிறாய். இனிமையாகப் பேசமாட்டாயா ! அலைமோதும் அழகிய வளமான செந்திற்பதி வளரவரும் கந்தனே ! சிவன்பெற்ற சிறுவனே ! தாலோ தாலேலோ. நான்முகனும் சங்கரியும் நான்மறைகளும் வணங்கும் பார்வதிதேவி பெற்றெடுத்த சிறுவா ! தாலோ தாலேலோ. ( 28 )

9. **வேறு.**

அரவுசிறு பிறைஇதழி திரிபதகை பொதிசடிலர் பாலா வேலாதேர்
அருணவெயில் இரவிசுழல் இமகிரியில் அரிவைபெறு வாழ்வாய் வாழ்வோனே
குரவருளம் மகிழவுயர் குருவடிவு தருபெருமை கோடாய் தாடாளா
குமரகுரு பரமுருக குதலைமொழி தெரியஉரை கூறாய் மாறாதே
இரவலரும் முனிவர்களும் இமையவரும் உன(து)அடிமை யாமே யாமேநீ
எமைமுனியில் ஒருதுணையும் இலைஅடிமை அடிமைஎன வீழ்வார் சூழ்வார்பார்

பரசமய குலகலக சிவசமய குலதிலக தாலோ தாலேலோ
பணிலம்உமிழ் மணியைஅலை எறியும்நகர் வருகடவுள் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : திரிபதகை- கங்கை. சுழல்= சுற்றிவரும். கோடாய்= கொண்டவனே தாடாளா= ஊக்கமுடையவனே. மாறாதே கூறாய்= மறுக்காமல் கூறுக. ஆமே ஆமே= ஆம்ஆம். வீழ்வார்= திருவடியில் விழுந்து வணங்குவார். சூழ்வார்= வலம்வருவார். பரசமயம்= வேற்றுசமயம். பணிலம்= சங்கு. மணி= முத்து.

**பொழிப்புரை** : நாகம், மூன்றாம்பிறை,கொன்றைமலர், கங்கை ஆகியன பொதிந்த சடையுடைய சிவபிரான் மகனே ! அருணன் ஓட்டும் தேரில்வரும் ஒளியுடைய சூரியன் சுற்றிவரும் இமயமலைப் பார்வதிதேவி பெற்ற என்றும் வாழ்பவனாய் வாழ்கிறவனே ! பெற்றோர்மகிழ மேலான குருவடிவில் கோணாதவனே ! ஊக்கமுடையவனே ! குமரகுருவே ! மேலான முருகனே ! மறுக்காமல் உனது குதலைமொழி தெரியுமாறு பேசு. உன்அருளை யாசிப்பவரும், முனிவர்களும் தேவர்களும் உனது அடிமை என்பது உண்மை. நீ எம்மைச் சினந்தால் எமக்கு ஒருதுணையும் இல்லை. நாங்கள் உன்னடிமை உன்அடிமை என்று விழுந்து வணங்குவாரை, வலம் வருவாரைக்கடைக்கண் பார்த்தருள். வேற்றுச்சமயங்களுக் கேடனே ! சிவசமயங்களுக்குத் திலகமாய் விளங்குகிறவனே ! தாலோ தாலேலோ. சங்குகள் ஈன்ற முத்துகளை அலைகள் கரையில் எறியும் செந்தில்நகரில் எழுந்தருளியுள்ள கடவுளே தாலோ தாலேலோ. **( 29 )**

**10.** **வேறு.**

பங்கயன் முதலோர் இந்திரன் இமையோர் பாரோர் ஏனோர்பார்
பண்புடன் உனையே சிந்தையில் நினைவார் பால்நீ மால்கூராய்
வெங்கட கிரிசூழ் எண்திசை உறைவார் வீண்நாள் காணாதே
மின்பரி புரதாள் பொன்புரை முடிமேல் வேய்வார் வீறாலே
செங்கனி மணிவாய் தங்கிய நகைதா தேவா சீறாதே
திண்திறல் முருகா தண்தமிழ் விரகா சேரார் போர்ஏறே
சங்கரி மருகா சங்கரி சிறுவா தாலோ தாலேலோ
சந்ததம் இயல்தேர் செந்திலை யுடையாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : பங்கயன்= நான்முகன். மால்கூராய்= ஆசைமிகக்கொள்க. வீண்நாள் காணாதே= நாளினை வீணாக்காமல். மின்பரிபுரம்= ஒளிரும்சிலம்பு. தாள் வீறாலே= திருவடியின் பெருமையால். வேய்வார்= சூடுவார். சீறாதே நகை தா= சினங்கொள்ளாமல் முறுவல்தா. விரகா= வல்லவனே. சங்கு அரி= சங்கேந்திய திருமால், சங்கரி= பார்வதிதேவி. இயல்= தகுதி.

**பொழிப்புரை** : நான்முகன், தேவேந்திரன், தேவர்கள் முதலியவர்களும் நிலவுலகவரும் பிறரும் வந்துள்ளனர் பார்த்தருள். பண்புடன் தமதுமனத்தில் உன்னையே நினைப்பவர்பால் அருள நீ ஆசைமிகக்கொள்க. வெங்கடமலையைச்சூழ்ந்த எண்திசையில் வாழ்கிறவரும் தமது வாழ்நாள் வீணாகாதவாறு உனது ஒளிரும் சிலம்பணிந்த திருவடிப் பெருமையால் அதனைப் பொன்போல் சிறந்த தமது தலையில் சூடுவர். எங்கள்மேல் சினம் கொள்ளாது உனது சிவந்த கொவ்வைக்கனி போன்ற அழகிய இதழ்களில் தங்கிய முறுவல் தந்தருள். பேராற்றல்வாய்ந்த முருகா ! தண்டமிழில் வல்லவனே ! பகைவரை அழிக்கும் ஆண்சிங்கமே ! திருமால் மருகனே ! பார்வதிதேவிக்கு மகனே ! தாலோ தாலேலோ , எப்போதும் தகுதியில் தேர்ந்த திருச்செந்தூரை யுடையவனே ! தாலோ தாலேலோ. **( 30 )**

## 4. சப்பாணிப் பருவம்.

இருகைகளையும் ஒன்றுசேர்த்துக் கொட்டும் பருவமிது.

***************

1. பர(வு)அரிய நவமணி அழுத்துகல னுக்கழகு
பாலித்து வீறுபெற்ற
பன்னிரு புயங்குலுங் காமல்நீள் குழைதொறும்
பருவயிர குண்டலங்கள்
இரவிஒளி மட்கநின்(று) அசையாமல் அமு(து)ஒழுகும்

இந்துமுக மண்டலத்தில்
எழுதரிய திருநுதல் புண்டரம் குறுவெயர்(வு)
இறைக்கச்சி தைந்திடாமல்
கரகமல மலர்விரல் சிவப்புறா மற்கடக
கங்கணம்ஒ லித்திடாமல்
கழிவண்(டு )அலம்பும் கருங்குவளை ஓடைசூழ்
கழிதொறும் கானல்தொறும்
தரளமணி முழுநிலவு தருசெந்தில் வேலவா
சப்பாணி கொட்டியருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : பரவு அரிய= புகழ்தற்கு அருமையான. கலன்= அணிகலன். வீறு= பெருமை. குழை= காது. இரவி= ஞாயிறு. இந்து= நிலவு. புண்டரம்= திருநீற்றின் முக்குறித்தொகுதி. சிதைதல்= அழிதல். கடக கங்கணம்= கடகமும் கங்கணமும். ( தோளிலும் முன்கையிலும் அணிவன. ) கழி= உப்பங்கழி. கானல்= கடற்கரைச்சோலை. சமரமுக= போர்க்களத்தில். ரணவீர= ( பகைவர்க்குப் ) புண்செய்யும் வீரனே. பரசமய= வேற்றுச்சமயம். திமிராரி= இருளைக்கெடுப்பவன்..

**பொழிப்புரை** : புகழ்தற்கு அருமையான ஒன்பான்மணிகள் பதித்த அணிகலனுக்கு அழகுதந்து, பெருமைசால் பன்னிருதோள்களும் குலுங்காமல், நீண்டகாதுகளில் பருத்தவயிர குண்டலங்கள் ஞாயிற்றொளி மங்குமாறு அசையாமல் நிற்க, அமுதமொழுகும் முழுநிலவு ஒத்த திருமுகத்தில் உள்ள அழகியநெற்றியில் உள்ள தீட்டுதற்கரிய திருநீற்றின் முக்குறித்தொகுதி, முகத்தில்தோன்றும் குறுவியர்வையால் அழியாமல், கைகளாகிய தாமரைமலரிலுள்ள விரல்கள் சிவக்காமல்,தோள்வளை கங்கணம் ஆகியன ஒலியெழுப்பாமல் உப்பங்கழி வண்டுகள் ஒலிக்கும் கருங்குவளை மலர்ந்த ஓடைசூழ்ந்த உப்பங்கழிகளிலும் கடற்கரைச் சோலைகளிலும் முத்துகள் முழுநிலவின் ஒளிவீசும் செந்தில்வேலவனே ! சப்பாணிகொட்டியருள்க. போர்க்களத்தில்பகைவர்க்குப் புண்செய்யும் வீரனே ! வேற்றுச்சமய இருளைக் கெடுப்பவனே ! சப்பாணிகொட்டியருள்க. **( 31 )**

**2.** அண்டர்தம் துயரொழித் தனம்என்று கொண்டாடி
ஆவலங் கொட்டமன்னும்
அயிராணி கலவிஅமு(து) உண்டனம் எனத்தேவர்
அர(சு)இரு கரங்கள்கொட்டத்
துண்டவெண் பிறைபுரை எயிற்றுவெஞ் சூர்உளம்
துண்ணெனப் பறைகொட்டநீள்
சுருதிஅந் தணர்இடம் தொறும்மங் கலப்பெரும்
தூரியம் கொட்டமுட்டப்
பண்(டு)அரு பெருங்கவிப் புலமைக்கு நீசொன்ன
படிதிண்டி மம்கொட்டவெம்
பகைநிசா சரர்வளம் பதிமுழுதும் நெய்தலம்
பறைகொட்ட வெள்வளைதரும்
தண்தரளம் அலைமொண்டு கொட்டுநக ராதிபதி
சப்பாணி கொட்டியருளே
சமரமுக ரணசவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : அண்டர்= தேவர்கள். ஆவலங்கொட்ட= வாயால் தோத்திரம்சொல்ல. மன்னும்= பெருமைபொருந்திய. தேவர் அரசு= தேவேந்திரன். எயிற்று= பற்களுடைய. துண்ணென= நடுக்குற்று. பறைகொட்ட= படபடப்புக் கொள்ள. தூரியம்= இசைக்கருவி, முட்ட= முழுதும். பண்டு= முற்காலத்தில். அரு= சிவபிரானது. பெருங்கவிப்புலமை= பெருமை தங்கிய ( இறையனார் களவியல்) பாட்டின் பொருள். திண்டிமம்= தம்பட்டம் என்ற இசைக்கருவி. நிசாசரர்= ( இரவில் அலையும் ) அசுரர். நெய்தலம்பறை= சாப்பறை. தரளம்= முத்து.

**பொழிப்புரை** : தேவர்கள் தமது துயரம் தீர்ந்தோம் என்று கொண்டாடி வாயால் தோத்திரம் சொல்ல, பெருமைபொருந்திய இந்திராணியுடனான புணர்ச்சியமுது உண்டோம் என்று இந்திரன் இருகைகொட்டி மகிழ, மூன்றாம்பிறை போல் வளைந்த பற்களுடைய கொடிய அசுரர்களின் உள்ளம் நடுக்குற்றுப் படபடக்க, வேதம்வல்ல அந்தணர் வாழிடந்தோறும் மிக்கமங்கலம் கூறும் பெரிய இசைக்கருவிகள் முழங்க, பண்டைநாளில் சிவபிரான் அருளிய பெருமைதங்கிய இறையனார் களவியல் செய்யுள் முழுவதுக்கும் நீசொன்ன பொருளுக்குத் தம்பட்டமென்ற இசைக்கருவி முழங்க, பகைவராகிய அசுரர்களின் வளமான ஊர்கள்தோறும் சாப்பறை கொட்ட, வெண்மையான சங்குகளை அலைமுகந்து கரையில்கொட்டும் நகராகிய திருச்செந்தூர்க்கு அதிபதியே ! சப்பாணிகொட்டியருள்க. போர்க்களத்தில் பகைவர்க்குப் புண்செய்யும் வீரனே ! வேற்றுச்சமய இருளைக் கெடுப்பவனே ! சப்பாணி கொட்டியருள்க. ( 32 )

3. பௌவம்எறி கடலாடை உலகில்ஒரு வேடுவன்
பறவைக்கு நிறைபுகுந்த
பார்த்திபன் பாவையும் இயற்குலச் சிறையும்
பணித்தருள மதுரைபுக்குத்
தெவ்வர்இடு திருமடத்(து) எரிசெழியன் உடல்உறச்
சென்றுபற் றலுமெவர்க்கும்
தீராத வடவையனல் வெப்புமுது கூனும்
திருத்திஒரு வாதில்வென்று
வெவ்வழலில் எழுதியிடும் ஏடும்பெ ருக்(கு)ஆற்று
விட்டதமிழ் ஏடும்ஒக்க
வேகாமல் எதிரே குடக்(கு)ஏற வெங்கழுவில்
வெய்யசமண் மூகர்ஏறச்
சைவநெறி ஈடேற வருகவுணி யக்குழவி
சப்பாணி கொட்டியருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : பௌவம்= அலை. பார்த்திபன்= சிபிப்பேரரசன். பாவை= பாவையாகிய மங்கையர்க்கரசியார். இயல்= தமிழறிவில் சிறந்த. பணித்தருள= ( வருமாறு )வேண்டியழைக்க. தெவ்வர்= பகைவர் ஆகிய சமணர். வடவை அனல்= வடவாமுகாக்கினி. திருத்தி= நலமுறச்செய்து. எழுதியிடும் ஏடு= “ தளிரிள வளரொளி “பதிகம் எழுதிய ஏடு. ஆற்றுவிட்ட தமிழ் ஏடு= வைகையாற்றிலிட்ட “ வாழ்க அந்தணர் “ பதிகஏடு. குடக்கு= மேற்றிசை. மூகர்= ஊமையர். கவுணியக்குழவி= திருஞானசம்பந்தர்.

**பொழிப்புரை** : அலையெறியும் கடலை ஆடையாக உடுத்த இவ்வுலகில் ஒரு வேடுவன் எய்தபுறாவுக்கு ஈடாகத் தன்னையேதரத் தராசில்ஏறிய சிபிமன்னனின் சோழர்மரபின் வழிவந்த மங்கையர்க்கரசியாரும், தமிழறிவில் சிறந்தஅமைச்சர் குலச்சிறையாரும் வருமாறு வேண்டியழைக்க மதுரைக்கு வந்து, தங்கிய திருமடத்திற்குச் சமணபகைவர் இட்ட தீ பாண்டியன் உடம்பைப்பற்ற, அதனால் வந்த யாராலும் தீர்க்கமுடியாத வடவாமுகாக்கினி ஒத்த வெப்பையும், முதுகின் கூனையும் தீர்த்து நலமுறச்செய்து, ஒப்பற்ற வாதில்வென்றும், “ தளரிள வளரொளி “ பதிகஏட்டைக்கொடியதீயில் இட்டும், வைகைப்பேராற்றில் இட்ட “ வாழ்க அந்தணர் “ பதிகஏடும் முறையே வேகாதும், ஆற்றை எதிர்த்து மேற்கே திருஏடகம் சென்றுகரையேறவும், கொடியகழுவில் சமணர் ஊமையராய் ஏறவும், சைவநெறி தழைத்தேறவும்வந்த திருஞானசம்பந்தராகிய குழந்தையே ! சப்பாணி கொட்டியருள்க. போர்க்களத்தில் பகைவர்க்குப் புண்செய்யும் வீரனே ! வேற்றுச்சமய இருளைக் கெடுப்பவனே ! சப்பாணிகொட்டியருள்க.

**ஒருகுறிப்பு** : “ பெம்மான் முருகன் பிறவான் இறவான் “ . ஆனால் சமயகுரவராகிய திருஞானசம்பந்தர் கருவாய்ப்பட்டுப் பிறந்தவர் என்பது தெய்வச்சேக்கிழார் வாக்கு. முருகனாகத் திருஞானசம்பந்தரைக் கூறும் குளறுபடியைக் கற்றறிந்த பெருமக்களும் இடைக்காலத்தில் தத்தம் கவிதைகளில் கூறநேர்ந்தது, அக்காலத்துச்சிலரின் வல்லாண்மையைக் காட்டுகிறது. ( 33 )

4. பைந்தாள் தழைச்சிறைக் கானவா ரணமருவு
பந்தரிடு முல்லைவேலி
பாயும்முள் பணைமருப்(பு) ஏறுதழு வியும்முடைப்
பாலறா மேனிமடவார்
கொந்தார் குரும்பையின் வனமுலை முகக்கோடு
குத்தக்கு ருந்தொசித்தும்
குறுங்கழைத் துண்டம் தனிற்சிறு துளைக்கருவி
குன்(று)உருக நின்றழைக்கும்
செந்தா மரைக்கைவிரல் கொடுபுதைத் தும்சுருதி
தெரியவிரல் முறையில்விட்டும்
தேனுவின் பிறகே திரிந்தும் கவுள்குழி
திறந்துமத மாரிசிந்தும்
தந்தா வளந்தனக்(கு) உதவுதிரு மால்மருக
சப்பாணி கொட்டியருளே
தரளம்எறி கரையில்வளை தவழ்செந்தில் வேலவா
சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : தழைசிறை= தழைத்த சிறகு. கானவாரணம்= காட்டுக்கோழி. முல்லைவேலி= முல்லைநிலம். பணைமருப்பு= பருத்த கொம்பு. ஏறு= காளை. பால்முடைஅறா= பாலின் முடைநாற்றம் நீங்காத. கழைத்துண்டம்= மூங்கில் துண்டு - புல்லாங்குழல். புதைத்து= மூடி. தேனு= பசு. கவுள்குழி= கன்னக்குழி. மதமாரி= மதமழை. தந்தாவளம்= கஜேந்திரனாகிய யானை.

**பொழிப்புரை** : வலிமையான கால்களையும் தழைத்த சிறகுகளையும் உடைய காட்டுக் கோழிக்காகப் பொருத்தமான பந்தலிடும் முல்லைநிலத்தில், பாலின் முடை நாற்றம் அறாத உடம்புடைய ஆய்ச்சியரின் கொத்தாகஉள்ள தென்னங்குரும்பை போன்ற முலைகளின் அழகியநுனி தம்மார்பில்குத்தும்பொருட்டுப், பாயும்குணமுடையதும் பருத்த கூரிய முள்போன்ற கொம்புடையதும் ஆகிய காளைகளைத் தழுவியும்; குருந்தமரங்களின் கிளைகளை அரைவெட்டாக வெட்டி வளைத்தும்; சிறிய மூங்கில்துண்டாகிய சிறியதுளைகளுடைய புல்லாங்குழலில் குன்றும் உருகும்இசை தோன்றத் தமது செந்தாமரை ஒத்த கைவிரல்களால் முறைப்படி மூடியும் திறந்தும் பசுக்களின் பின்னே திரிந்தும், கன்னக்குழி திறந்து மதமழை சிந்தும் யானையாகிய கஜேந்திரனுக்கு அருள்புரிந்த திருமால் மருகனே ! சப்பாணிகொட்டியருள்க. முத்துகளை அலைஎறியும் கரையில் சங்குகள் தவழும் செந்தில்வேலவனே ! சப்பாணிகொட்டியருள்க. **( 34 )**

5. கார்கொண்ட கூடம்ஓர் ஏழும்நீ
கற்பிக்கும் மந்த்ரசாலை
கற்பதா ருவும்நின் புயத்தினுக்(கு) அணிமாலை
கட்டவளர் நந்தனவனம்
சீர்கொண்ட புருகூத னும்தேவர் குழுவும்நின்
திருநாமம் மறவாதபேர்
சிகரகன காசலமும் உனதுதிரு ஆபரணம்
சேர்வைசேர் பேழைகடல்நீர்
போர்கொண்ட வேலின் புலால்கழுவு நீர்ஏழு
பொழிலும்அத் தனைதீவும்ஓர்
பொலிவினுட னேநின் கலாபமயில் வையாளி
போய்மீளும் வீதிஎனவே
தார்கொண்ட மணிமார்ப செந்தில்வடி வேலனே
சப்பாணி கொட்டியருளே
தரளம்எறி கரையில்வளை தவழ்செந்தில் வேலவா
சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : கூடம்= பேரண்டகூடம். மந்த்ரசாலை= வானிடங்கள். புருகூதன்= இந்திரன். சிகர கனகாசலம்= பொன்மேருமலையின் உச்சி. சேர்வைசேர்= சேர்த்துவைக்கும். பொழில்= உலகம். மயில் வையாளி போய்= மயிலாகிய குதிரை சென்று.

**பொழிப்புரை** : மேகம்கவிந்த ஒப்பற்றபேரண்டகூடம் ஏழும் நீபடைத்த வானிடங்கள், கற்பகமரம் நின்தோள்களுக்கு அழகியமாலைகட்ட வளரும் நந்தனவனம், சிறப்புவாய்ந்த இந்திரனும் தேவர் கூட்டமும் நின் திருப்பெயரை மறவாதவர்கள், பொன்மேருமலையின் உச்சி உனது திருவாபரணங்களைச் சேர்த்துவைக்கும் பெட்டி, கடல்நீர் உனது வேலில்படிந்த புலாலைக்கழுவும் நீர், ஏழுஉலகங்களும் பிற அத்தனைத் தீவுகளும் உனது தோகைமயிலாகிய குதிரை விரைந்துசென்று மீளும் வீதி என்றுகொண்டு வெற்றிமாலைசூடிய அழகிய மார்பனே ! செந்தில் வடிவேலனே ! சப்பாணி கொட்டியருள். முத்துகளை அலைஎறியும் கரையில் சங்குகள் தவழும் செந்தில் வேலனே ! சப்பாணி கொட்டியருள்க. **( 35 )**

**6.**

கவளமத வெற்புநிலை உலகுபர வப்ரபைகொள்
கைத்தா மரைக்கடகபூண்
கதிரொளி விரிக்கவளர் சிகையின்இடு சுட்டிமிசை
கட்டாணி முத்(து)ஒளிரவே
பவளஇதழ் புத்தமுதம் ஒழுகுமத லைக்குதலை
பப்பாதி சொல்தெரியவே
பரிபுரம் ஒலிக்கவரு குறுநகை எழுப்பியிடவே
பைச்சேடன் உச்சிகுழிபாய்
உவளகம் அனைத்தும்இள வரிவளை முழக்கவெடி
உற்றேபெ ருத்தகயல்போய்
ஒருபுடை குதிக்கவரி அலவன்அளை யில்புகுத
உப்பூறு நெட்டகழிதோய்
தவளமணி முத்தைஅலை எறியுநக ருக்கதிப
சப்பாணி கொட்டியருளே
சருவிய புறச்சமய விரதியர் குலகலக
சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : கவளம்= வாயளவு உருட்டிய உணவு. மதவெற்பு= மதம்பிடித்தமலைஒத்த யானை. நிலை= தாங்கும். ப்ரபை= ஒளி. சிகை= தலைமுடி. ஆணிமுத்து= முதன்மையானமுத்து. மதலை= மழலை. பப்பாதி= பாதிப்பாதி. பை= படம். உச்சி= நடுத்தலை. குழிபாய்= பள்ளம்வரை செல்லும். உவளகம்= குளம். வெடியுற்று= விசையுடன். ஒருபுடை= ஒருபக்கம். அளை= சேற்றுக்குழி - வளை. நெட்டகழி= நீண்ட உப்பளம். சருவிய= கூட்டமான.

**பொழிப்புரை** : கவளமாக உண்ணும் மதயானை தாங்கும் உலகம் பரவவும், ஒளிபொருந்திய கையாகிய தாமரையில் அணிந்த கடகமாகியஅணி ஞாயிற்றொளி விரிக்கவும், தலைமுடியில் இட்ட சுட்டியில் முதன்மையான முத்துஒளிரவும், பவளம்போன்ற உதடுகளில் புதிய அமுதம் ஒழுகவும், மழலையும் குதலையுமாகிய சொல்பாதிப்பாதியளவு பேசவும், சிலம்பு ஒலிக்கவரும்போது குறுமுறுவல் பூக்கவும், படமுடைய ஆதிசேடனின் உச்சிக்குழிவரை செல்லும் கோடுகளுடைய குளங்கள் அனைத்திலும் இளையசங்குகள் முழக்கமிட, விசைகொண்டெழுந்த பருத்த கெண்டைமீன் ஒருபக்கம் குதிக்க, கோடுகளுடைய நண்டு வளையில்புக, உப்புநீருடைய நீண்ட உப்பளத்தின் வெண்மையான முத்தினை அலைகள் கரையில் எறியும் செந்தில்நகருக்கு உரியவனே ! சப்பாணி கொட்டியருள்க. கூட்டமான வேற்றுச்சமயம்சார்ந்தவர் குலத்துக்குக் கேடுசெய்பவனே ! சப்பாணி கொட்டியருள்க. **( 36 )**

**7.**

வேறு

கருதிய தமனிய மணிஅரை வடம்இடு கட்டுவ டத்தோடும்
கழலிடு பரிபுரம் ஒலிஎழ மணியுமிழ் கைக்கட கப்பூணும்
இருசுடர் ஒளிபெற மருவிய தளர்நடை யிட்டும திப்பாக
எழுமதி புரைதிரு முகமலர் குறுவெயர் இட்டுவ ரத்தாமம்
சொருகிய நறுமலர் முகையவிழ் சிகையிடு சுட்டிநு தல்தாழத்

தொழு(து)உனை வழிபடும் அடியவர் இளையவர் சொற்படி தப்பாமல்
குருமணி அலைஎறி திருநகர் அதிபதி கொட்டுக சப்பாணி
குருபர சரவண பவசிவ மழவிடை கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை** கருதிய= மதிக்கத்தக்க. தமனியம்= பொன். மணி= ஒலிக்கும்மணி. அரைவடம்= அரைஞாண் - இடுப்புக்கயிறு. மணி= மாணிக்கமணிகள். மதிப்பாகத் தளர்நடை இட்டு= மதிக்கத்தக்க வகையில் தடுமாற்றநடை நடந்து. எழுமதி= உதயநிலா - முழுநிலா. தாமம்= மாலை. சிகை= தலைமுடி. இளையவர்= வாலிபர். குருமணி= ஒளிரும் முத்து. சிவமழவிடை= சிவன்பெற்ற இளங்காளை.

**பொழிப்புரை :** மதிக்கத்தக்க - மாற்றுயர்ந்த பொன்னாலான ஒலிக்கும்மணிகள் கட்டிய அரைஞாணுடன், காலில்இட்ட சிலம்பும் ஒலிக்க, கையில்அணியும் மாணிக்கமணி பதித்த அணியான கடகம் பெருஞ்சுடராகிய ஞாயிற்றொளியுடன் ஒளிர, மாலையாகச் சூட்டிய மலர்மொட்டுகள் மலர்ந்து மணம்பரப்ப, தலைமுன் முடியில் இட்ட சுட்டி நெற்றியில் தாழ, உன்னை வழிபடும் அடியவர்கள் வாலிபர்கள் சொல்லில் தப்பாதபடி மதிக்கத்தக்கவகையில் தளர்நடை நடந்து, முழுநிலவு ஒத்த முகமலரில் சிறு வியர்வை துளிக்க, ஒளிபொருந்திய முத்துகளைக் கரையில் அலைஎறியும் திருநகராகிய செந்திலுக்கு அதிபதியே ! சப்பாணிகொட்டுக. மேலானகுருவே ! சரவணத்தில் தோன்றியவனே ! சிவபிரான் பெற்ற இளங்காளையே ! சப்பாணி கொட்டியருள்க. **( 37 )**

**8.** வரைபுரை புயமிசை இடுதொடி அணிகலன் மற்றுள முத்தாரம்
மணிமுடி குழையிடும் இருசிகை அழகெழ மைக்குவ ளைப்போதின்
விரைசெறி குழலியர் செவிலியர் அவரவர் மிக்கவி ருப்பானார்
விபுதரும் முனிவரும் உன(து)அடி பரவிஉன் வெற்றிஉ ரைப்பார்சீர்
அரைமணி உடைமணி கணகண கணஎன அத்திமு கத்தானும்
அரிபிர மனும்உமை கணவனும் மனம்மகிழ் அற்புவி ளைத்தார்பார்
குரைகடல் அலையெறி திருநகர் அதிபதி கொட்டுக சப்பாணி
குருபர சரவண பவசிவ மழவிடை கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை :** வரைபுரை= மலையொத்த. தொடி= தோள்வளை. முடியிடுமணி= தலையில் சூட்டிய மாணிக்கம். குழை= காதணி. இருசிகை= நீண்ட தலைமுடி. மைக்குவளைப்போது= கருங்குவளைமலர். விரை= மணம். குழலியர் செவிலியர்= கூந்தலுடைய வளர்ப்புத்தாயர். விபுதர்= தேவர்கள். அரைமணி= இடையில்கட்டிய மணி. உடைமணி= மேகலாபரணத்தில் கோத்தமணி. அத்திமுகத்தான்= யானைமுகத்து விநாயகர். அற்பு= அன்பு.

**பொழிப்புரை :** மலைஒத்த தோள்களில் பூட்டிய தோள்வளை, அணிகலன், மற்றுமுள்ள முத்தாரம், அழகிய தலையில் சூட்டிய மாணிக்கம், காதில் இட்ட குழை, நீண்டதலைமுடி ஆகியவை அழகுடன் விளங்க; கருங்குவளைமலரின் மணம் செறிந்த கூந்தலுடையவராகிய வளர்ப்புத்தாயர் முதலியோர் உன்மேல் மிக்க விருப்புடையவரானார். தேவர்களும் முனிவர்களும் உன் திருவடியைப் போற்றி உனது வெற்றியைக் கூறுவர். சிறந்த இடுப்பில் கட்டியமணியும் மேகலாபரணத்தில் கோத்த மணியும் கணகணகண என்றுஒலிக்க, அதுகேட்டு விநாயகரும், திருமாலும், நான்முகனும், சிவபிரானும் மிக்க அன்புபூண்டனர் பார்த்தருள். ஒலிக்கும் கடல்அலைகள் கரையில் மோதும்செந்தில் நகருக்கு அதிபதியே ! சப்பாணி கொட்டுக. மேலான குருவே ! சரவணத்தில் தோன்றியவனே ! சிவன் பெற்ற இளங்காளையே ! சப்பாணி கொட்டியருள்க. **( 28 )**

**9.** வேறு
கந்தத் தகட்டின்அர விந்தத் தனிக்கடவுள் கற்பாய்எனச் சுருதிநூல்
கண்டித்(து) உரைத்திடவும் இந்தக் கரத்திலுரை கற்பால் உரைத்திஎனவே
அந்தப் பொருட்பகுதி அந்தத் தினைப்பகரும் அப்போ வெறுத்து முனிவாய்
அஞ்சத் திருக்கும்அயன் அஞ்சச் சிறைக்குள்இடும் அப்பா சிறக்கும்அமலா
பந்தப் பிறப்(பு)ஒழிய வந்தித்(து) இருக்கும்அவர் பற்றாக நிற்கும் முதல்வா
பண்டைக் குடத்திலுறும் முண்டம் சிறுத்தமுனி பற்றாசை உற்றுமிகவாழ்
சந்தப் பொருப்(பு)இறைவ செந்தில் பதிக்குமர சப்பாணி கொட்டியருளே
சங்கத் தமிழ்ப்புலவ துங்கக் கொடைக்குமர சப்பாணி கொட்டியருளே

**குறிப்புரை** : தகடு= இதழ். அரவிந்தம்= தாமரைமலர். கடவுள்= நான்முகன். கற்பாய்= கற்றவனே. இந்த அக்கரம்= இந்த ஓங்காரம். கற்பால்= கற்றபடி. அந்தத்தினை= முடிவானபொருளை. முனிவாய்= சினந்து, அஞ்சம்= அன்னப்பறவை. அமலா= இயல்பாகவே மலமில்லாதவனே. பந்தம்= பாசம். பற்று= பற்றுக்கோடு. முண்டம் சிறுத்த= உடம்பால் குள்ளமான. முனி= அகத்தியர், பற்று= ஆதாரம். சந்தப்பொருப்பு= சந்தனமலை ( செந்தில் முருகன் கோயில் சந்தனமலைமேல் உள்ளது என்பர் ) துங்கம்= உயர்வு.

**பொழிப்புரை** : மணக்கும் இதழ்களுடைய தாமரைமலரில் இருக்கும்நான்முகனை, " வேதநூல்கற்றவனே ! வேதத்தின் ஓங்காரத்திற்கு நீ கற்றபடிபொருள் கூறுக " என்றுகண்டித்துக் கூற,அவன் அதன் பொருட்பகுதியின் முடிந்த முடிவைக் கூறும் அப்போது தவறாகக் கூறியதால் வெறுத்துச் சினந்து அன்னப்பறவையில் செல்லும் அவன் அஞ்சுமாறு சிறையிலிட்ட அப்பனே ! இயல்பாகவே மலமின்றிச் சிறந்து விளங்குகிறவனே ! பாசத்தால்வரும் பிறப்பு ஒழியும்பொருட்டு வணங்குவோர்க்குப் பற்றுக்கோடாக விளங்கும் முதல்வனே ! முன்னைநாளில் குடத்தில்தோன்றிய குள்ளமான அகத்தியர்க்கு அதாரமாக ஆசைமிகக் கொண்டு செந்தில் சந்தனமலையில் வாழும் இறைவனே ! செந்தில்நகர் குமரனே ! சப்பாணிகொட்டியருள்க. சங்கத்தமிழ்ப் புலவனே ! உயர்ந்த வீடுபேறளிக்கும் குமரனே ! சப்பாணிகொட்டியருள்க. **( 39 )**

**10.** வேறு

புதுமலர் சிதறிம கிழ்ந்து வானவர் பொற்றாளி னைப்பரவவே
புகலரும் இசைதெரி தும்பு(ரு) ஆதியர் புக்(கு)ஆத ரித்துவரவே
மதுகரம் இடறிய தொங்கல் மாலிகை மல்பூத ரத்(து)அசையவே
மணிஒளி வயிரம் அலம்பு தோள்வளை மட்டாய்நெ ருக்கமுறவே
சதுமறை முனிவர்கள் தங்கள்நாயக சப்பாணி கொட்டியருளே
சரவண பவகுக செந்தில் வேலவ சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : ( மூன்றாமடி மூலத்தில் காணப்பெறவில்லை ) தும்புரு= யாழ்இசைப்பதில் சிறந்தவருள் உயர்ந்தவர். மதுகரம்= வண்டு. தொங்கல் மாலிகை= தொங்கும் கடம்பமலர் மாலை. மல்= வலிய. பூதரம்= மலைபோன்ற தோள். மட்டாய்= அளவுக்கு அளவாக.

**பொழிப்புரை** : தேவர்கள், உனதுஅழகியதிருவடிகளில் புத்தம்புது மலர்கள் தூவி மகிழ்ந்து போற்ற,சொல்லுதற்கரிய புகழ்வாய்ந்த இசைவல்ல தும்புரு முதலியோர் அன்புடன்வர, தேன்வண்டுகள் மோதுகின்ற தொங்கும் கடம்பமலர்மாலைகள் வலிமையான மலைபோன்ற தோள்களில் அசைய, மாணிக்கமணியும் வயிரமும் ஒளிரும் தோள்வளை அளவுக்குஅளவாக நெருங்கியிருக்க, நால்வேதம் வல்ல முனிவர்களுக்குத் தலைவனே சப்பாணிகொட்டியருள்க. சரவணத்தில் தோன்றியவனே ! குகனே ! செந்தில் வேலவனே ! சப்பாணிகொட்டியருள்க. **( 40 )**

## 5.முத்தப்பருவம்.

இதழ்முத்தம்தர வேண்டும் பருவமிது.

***********

**1.**
கத்தும் தரங்கம் எடுத்(து)எறியக் கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்தில் கான்ற மணிக்கு விலையுண்டு
தத்தும் கரட விகடதட தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளம் தனக்கும் விலையுண்டு தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்
கொத்தும் சுமந்த பசும்சாலிக் குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலம்தனக்குக் கூறும் தரம்உண்(டு)உன் கனிவாய்
முத்தம் தனக்கு விலையில்லை முருகா முத்தம் தருகவே
முத்தம் சொரியும் கடல்அலைவாய் முதல்வா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : தரங்கம்= அலை. கடுஞ்சூல்= முதிர்ந்த கருப்பம். உளைந்து= வருந்தி. வாலுகம்= வெண்மையானமணல்மெடு. கான்ற= கக்கிய. மணி= முத்து. தத்தும்= பாயும். கரடம்= மதநீர். விகட தட= அழகிய பருத்த. தந்தி= யானை. மணிக்கொத்து= நெல்கொத்து. சாலி= நெற்கதிர். கொண்டல்= மேகம். அலைவாய்= திருச்செந்தூர்.

**பொழிப்புரை** : முதிர்ந்த கருக்கொண்ட வலம்புரிச் சங்குகளை,முழங்கும் அலைகள் தூக்கிஎறிய, அதனால் வருந்திய அவை கரையில் ஊர்ந்துசென்று மணல்மேட்டில் கக்கிய முத்துக்கு விலையுண்டு, பாய்ந்துவரும் மதநீருடன் கூடிய அழகியபருத்த பிறைபோல் வளைந்த தந்தமுடைய யானையின் தந்தத்தில் விளையும் முத்துக்கு விலையுண்டு, செழித்து நெல்மணிக்கொத்துகளால் வளைந்த வளமான இனிய நெல்மணிக்கும் விலையுண்டு, மேகம் தரும் முத்துக்கும் விலைகூறும் தகுதியுண்டு, முருகா ! உனது கொவ்வைக்கனிஒத்த இதழ்களால்தரும் முத்தத்திற்கு விலையில்லை, முத்தம் தருக. முத்துகளைச் சொரியும் கடலுடைய திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள முதற்பொருளே முத்தம் தருக. **( 41 )**

**2.** வளைக்கும் தமரக் கருங்கடலின் வளைவாய் உகுத்த மணிமுத்(து)உன்
வடிவேல் கறைபட்(டு) உடல்கறுத்து மாசுபடைத்த மணிமுத்தம்
துளைக்கும் கழையின் பருமுத்தம் துளபத் தொடைமால் இதழ்பருகித்
தூற்றும் திவலை தெறித்தமுத்தம் சுரக்கும் புயலில் சொரிமுத்தம்
திளைக்கும் கவன மயில்சிறையில் சிறுதூள் பொதிந்த குறுமுத்தம்
செந்நெல் முத்தம் கடைசியர்கால் தேய்த்த முத்தம் செழுந்தண்டேன்
முளைக்கும் குமுதக் கனிவாயால் முருகா முத்தம் தருகவே
முத்தம் சொரியும் கடல்அலைவாய் முதல்வா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : வளைக்கும்= சூழ்ந்த. உகுத்த= ஈன்ற. மணி= அழகு. கறைபட்டு= குற்றம்பட்டு. கழை= மூங்கில். பருகி= சங்கு உட்கொண்டு. தூற்றும்= வெளிச்சொரியும். திவலை= எச்சில்திவலை. புயல்= மேகம். திளைக்கும்= நெருங்கும். கவனம்= விரைந்து செல்லும். தூள்= பூந்தாது. கால்= வமிசத்தார்.

**பொழிப்புரை** :உலகைச் சூழ்ந்து பேரொலிஎழுப்பும் கரிய கடலின் சங்குகள் ஈன்ற அழகிய முத்தம், நீ உக்கிரகுமாரபாண்டியன் ஆனபோது கடல்வற்ற வீசிய கூரிய வேலால் குற்றம்பட்டு உடல்கறுத்து மாசுபடைத்த முத்தம், வண்டுகள் துளைக்கும் மூங்கிலில் விளையும் பருத்த முத்தம், துளசிமாலை யணிந்த திருமால் சங்கினை வாயால்ஊதும்போது எச்சிலைப்பருகிய சங்கு வெளியே சொறியும் எச்சில்துளியாகத் தெறிக்கும் முத்தம், மழைதரும் மேகம் சொரியும் முத்தம், வேகமாகச் செல்லும் மயிலின் சிறகில் பட்டொளிரும் பூந்தாது நெருங்கி ஒளிரும் முத்தம், செந்நெல் தரும் முத்தம், உழத்தியர் வமிசத்தார் தீட்டித் தேய்த்தெடுக்கும் அரிசியாகிய முத்தம் இவை வேண்டா. செழித்த தண்ணிய தேனின் இனிமை தோன்றும் செங்குமுதமலர் போன்ற உன்கனிந்த வாயால் முத்தம் தருக. முத்துகளைச் சொரியும் கடலுடைய திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள முதல்வனே முத்தம் தருக.
**( 42 )**

**3.** கலைப்பால் குறைந்த பிறைமுடிக்கும் கடவுள் உடலின் விளைபோகம்
கனலி கரத்தில் அளிக்கஅந்தக் கனலி பொறுக்க மாட்டாமல்
மலைப்பால் விளங்கும் சரவணத்தில் வந்து புகுத ஓர்ஆறு
மடவாள் வயிறு சூல்உளைந்து மைந்தர் அறுவர்ப் பயந்தெடுப்பக்
கொலைப்பால் விளங்கும் பரசுதரன் குன்றில் அவரைக் கொடுசெல்லக்
கூட்டி அணைத்துச் சேரஒரு கோலம் ஆக்கிக் கௌரிதிரு
முலைப்பால் குடித்த கனிவாயால் முருகா முத்தம் தருகவே
முத்தம் சொரியும் கடல்அலைவாய் முதல்வா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : கலைப்பால்= கலையின் பெரும்பகுதி. கடவுள்= சிவபிரான். போகம்= இன்ப மாகிய தீப்பொறி. கனலி= தீக்கடவுள். மலைப்பால்= இமயமலைக்கண். ஆறுமடவாள்= கார்த்திகைப் பெண்கள் அறுவர். கொலைப்பால்= கொலையில். பரசுதரன்= மழுவேந்திய சிவபிரான். குன்றில்= கயிலைக்குன்றுக்கு. ஒருகோலம்= ஓருரு. கௌரி= பார்வதிதேவி.

**பொழிப்புரை** : தனது கலையின் பெரும்பகுதி குறைந்தநிலவாகிய மூன்றாம்பிறையைச் சடையில் தரித்த சிவபிரான் உடம்பில் விளைந்த இன்பமாகிய தீப்பொபொறியைத் தீக்கடவுள் கையில்கொடுக்க அவரதனைப் பொறுக்கமாட்டாமல் இமயமலைக்கண் உள்ள சரவணப்பொய்கையில் விட, அதனைக் கார்த்திகைப்பெண்கள் அறுவர் தாங்கிச் சூல்கொண்டு

ஆறுமைந்தர்களைப் பெற்றெடுக்க, கொலைக்கண் சிறந்துவிளங்கும் மழுப்படை ஏந்திய சிவபிரான் மைந்தர் அறுவரையும் கயிலைக் குன்றுக்குக் கொண்டுசெல்ல, அவ்அறுவரையும் பார்வதிதேவி ஒருசேரக் கூட்டியணைத்து ஒரேவடிவமாக்கியபின் அவரது முலைப்பால் குடித்த கனிஒத்த வாயால் முருகனே ! முத்தம் தருக. முத்துகளைச் சொரியும் கடலுடைய திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள முதல்வனே ! முத்தம் தருக.
( 43 )

4. கத்தும் கடலின் நெடும்படவில் கழியில் கழிநீ ரில்சுழியில்
கானல் கரையில் கரைதிகழும் கைதைப் பொதும்பில் சுரும்பினங்கள்
தத்தும் கமலப் பசும்பொகுட்டில் சாலிக் குலையில் சால்அடியில்
தழைக்கும் கதலி அடிமடலில் தழைவைத்(து) உழுத முதுகுரம்பைக்
குத்தும் தரங்கப் புனல்கவரில் குவளைத் தடத்தின் மடைவாயில்
குடக்கூன் சிறுமுள் பணிலம்ஒரு கோடி கோடி ஈற்றுளைந்து
முத்தம் சொரியும் கடல்அலைவாய் முதல்வா முத்தம் தருகவே
மொழியும் சமயம் அனைத்தினுக்கும் முதல்வா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : படவு= ஒருவித கைத்தோணி. கானல்= கடற்கரைச்சோலை. கைதைப் பொதும்பு= தாழைப் பொந்து. தத்தும்= மோதியெழும். சாலி= நெல். கதலி= வாழை. முதுகுரம்பு= பழைமையான வரப்பு. கவர்= வெடிப்பு. தடம்= குளம். பணிலம்= சங்கு. ஈற்று உளைந்து= கருமுதிர்ச்சியால் வருந்தி. மொழியும்= உலகவர் கூறும்.

**பொழிப்புரை** : பேரொலிஎழுப்பும் கடலில் செல்லும் கைத்தோணியில், உப்பங்கழியில், உப்பங்கழிநீரில், நீர்ச்சுழியில், கடற்கரைச்சோலைக்கரையில், அக்கரையையொட்டிய தாழைகளின் வேர்ப்பொந்தில், வண்டுகள் மோதிஎழும் தாமரைக்கொட்டையில், நெற்குலையில், உழுதசாலடியில், செழித்த வாழையின் மடலடியில், தழைவைத்து உழுதநிலத்துப் பழைமையான வரப்பினைக் குத்தும் அலைநீரில், குவளைமலர் மலர்ந்த குளத்தின்மடையில், குடம்போல்வளைந்து,சிறு முட்களுடன் கூடிய சங்குகள் கோடிகோடி கருமுதிர்ச்சியால் வருந்தி முத்துகளைச்சொரியும் கடலுடைய திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள முதல்வனே ! முத்தம் தருக. உலகவர்கூறும் சமயங்கள் அனைத்திற்கும் முதல்வனே ! முத்தம்தருக.
( 44 )

5. வயலும் செறிந்த கதலிவனம் மாடம்செறிந்த கதலிவனம்
மலர்க்கா எங்கும் தேனின்நிரை மாலை தோறும் தேனின்நிரை
புயலும் செறிந்த கனகவெயில் புடையே பரந்த கனகவெயில்
பொதும்பர் தோறும் ஓதிமம்ஒண் புளினம் தோறும் மோதுஇமம்செங்
கயலும் செறிந்த கட்கடையார் கலவி தரும்போர் கட்(கு)அடையார்
கருணை புரியும் அடியார்உன் காதல் புரிய மடியார்சீர்
முயலும் படிவாழ் திருச்செந்தூர் முருகா முத்தம் தருகவே
மொழியும் சமயம் அனைத்தினுக்கும் முதல்வா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : கதலி வனம்= வாழைச்சோலை. கதலிவனம்= கொடிகளின் கூட்டம். தேனின் நிரை= தேனடைகளின் வரிசை. தேனின் நிரை= வண்டுகளின் வரிசை. புயல்= மேகம். செறிந்த= நெருங்கிய. கனக எயில்= பொன்மதில். புடையே பரந்த= பக்கமெங்கும் பரவியுள்ள. கனகவெயில்= பொன்மயமான சூரியஒளி. பொதும்பர்= சோலை.ஓதிமம்= அன்னப்பறவை. புளினம்= மணல்மேடு. மோது இமம்= மோதுகிற பனி. கண்கடையார்= கடைக்கண்களுடைய மகளிர். அடையார்= சோர்வடையமாட்டார். காதல்புரிய மடியார்= அன்பு செலுத்தச் சோர்வடையார். சீர்முயலும்= வீடுபெற முயலும்.

**பொழிப்புரை** : நன்செய் நிலங்கள்தோறும் வாழைச் சோலை. மாளிகைதோறும் கொடிகளின் வரிசை. மலர்களுடைய சோலைதோறும் தேனடை. மலர்மாலைகள் தோறும் வண்டின் வரிசை. மேகம் செறிந்த உயரமானது பொன்மதில். அதன் பக்கமெங்கும் பரவியுள்ளது பொன்னிறச் சூரியஒளி. சோலைகள்தோறும் அன்னப்பறவைகள். மணல்மேடுதோறும் மோதுகிற - படிந்த பனி. கெண்டை மீன்போலும் கடைக்கண்களுடையவர் மகளிர். இவர் புணர்ச்சிப் போருக்குச்

சோர்வடையார். கருணையுடைய அடியவர்கள்உன்மேல் அன்புகாட்டுவதில் சோர்வடையார். வீடுபேறுபெற முயல்வோர் வாழும் திருச்செந்தூர் முருகா ! முத்தம்தருக. உலகவர் கூறும் அனைத்துச் சமயங்கட்கும் முதல்வனே ! முத்தம் தருக.

**குறிப்பு** : இச்செய்யுள் மடக்கணி பெற்றது. **( 45 )**

6 தொழுதும் துதித்தும் துயரகற்றிச் சுரருக்(கு)இறையும் சுரரும்உடன்
சூழ்ந்த கடம்பா டவியில்உறை சொக்கக் கடவுள் தனைமூன்று
பொழுதும் பரவி எழுத்துச்சொல் போலப் பொருளும் புகறிென
புகலும் ஆ(று)அஞ்(சு) இரட்டிதிணைப் பொருள்சூத் திரத்தின் பொருள்மயங்கா(து)
எழுதும் பனுவல் பரணன்முதல் ஏழேழ் பெருமைக் கவிப்புலவர்
இதயம் களிக்க விருப்பமுடன் இறையோன் பொருட்குப் பொருள்விரித்து
முழுதும் பகர்ந்த கனிவாயால் முருகா முத்தம் தருகவே
மொழியும் சமயம் அனைத்தினுக்கும் முதல்வா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : சுரருக்கு இறை= தேவேந்திரன். கடம்பாடவி= மதுரை. புகறிக்=கூறுக. புகலும் ஆறு= சொல்லும் விதத்தில். திணை அஞ்சுஇரட்டி= ஐந்து நிலங்களுக்கும் உரிய. புணர்தல் புணர்தல்நிமித்தம் முதலிய பத்து உரிப்பொருள்களையுமுடைய. பொருள்மயங்காது= உரைப்பொருள் குழப்பமின்றி. பொருட்குப் பொருள்விரித்து= இறையனார் களவியலுக்கு விரிவான பொருள்.

**பொழிப்புரை** : தேவேந்திரனும் தேவர்களும் முப்போதும் போற்றுகிற மதுரைச் சொக்க நாதப்பெருமானைத் தினம் மூன்று வேளையும் தொழுதும் துதித்தும், முன்புசொன்ன எழுத்து சொல் இலக்கணம்போல் பொருள் இலக்கணமும் கூறியருள்க என்றுவேண்ட , புணர்தல் புணர்தல் நிமித்தம் முதலான பத்துஉரிப்பொருள் கொண்ட பொருளிலக்கணச் சூத்திரத்தைப் பொருட்குழப்பமின்றி அருள, அதற்குப் பொருளெழுதிய கவிப்புலவர்கள்ஆகிய பரணர் முதலான நாற்பத்தொன்பதின்மரும் இதயம் களிக்க முழுவதும் பொருள்விரித்துக் கூறிய கனிவாயால் முருகனே ! முத்தம் தருக. உலகவர் கூறும் அனைத்துச் சமயங்கட்கும் முதல்வனே ! முத்தம்தருக. **( 46 )**

7. **வேறு**

கடுந டைச்சிந் துரம ருப்பின் கதிர்கொள் முத்தும் சரவைநீள்
கடல்அ ளிக்கும் பணில முத்தும் கழையின் முத்தும் கரடுவான்
உடுமு கட்(டு)அம் புயல்க ருக்கொண்(டு) உமிழும் முத்தும் கருகல்தேன்
ஒழுகு பொற்பங் கயம டல்தந்(து) ஒளிரும் முத்தும் திருகல்காண்
படுக ரைக்குண் டகழி நத்தின் பரிய முத்தம் தெரியவே
பரவை எற்றும் திரைகொ ழிக்கும் படியின் முத்தம் சிறுமகார்
கொடுப ரப்பும் பதிபு ரக்கும் குமர முத்தம் தருகவே
குறுமு னிக்கும் தமிழ்உ ரைக்கும் குமர முத்தம் தருகவே.

**குறிப்புரை** : சிந்துரம்= யானை. சரவை= (மிகச்சிறியதாகையால்) அற்பமானது. பணிலமுத்து= சங்கின் முத்து. கழை= மூங்கில். கரடு= சரசரப்பாகிய குற்றமுடையன. உடுமுகட்டு= விண்மீன்களை உச்சியிலுடைய. புயல்= மேகம். கருகல்= கருகுதலாகிய குற்றம். திருகல்= முருகுதலாகிய குற்றம். குண்டு அகழி= ஆழமான கிடங்கு. பரவை= கடல். கொழிக்கும்= ஒதுக்கும். படியின்முத்தம் = நிலத்தில்கிடக்கும் முத்து. தெரிய= ஆராய்ந்து. சிறுமகார்= சிறுவர்கள். கொடு= எடுத்து. குறுமுனி= அகத்தியர்.

**பொழிப்புரை** : விரைந்த நடையுடைய யானைத் தந்தம்கொடுக்கும் முத்து மிகச்சிறியது ஆகையால் அற்பமானது, பெரியகடல்சங்கு தரும்முத்தும் மூங்கில் தரும்முத்தும் சரசரப்பான குற்றமுடையன. வானத்து விண்மீன்களை உச்சியிலுடைய மேகம்கருக்கொண்டு தரும்முத்து கருகுதலாகியகுற்றமுடையது. தேன்ஒழுகும் அழகியதாமரை இதழ்கள் தரும்முத்து முருகுதலாகிய குற்றமுடையது. எனவே ஆழமான கிடங்கின் கரையில் கிடைக்கும் பருத்தமுத்துகளைத்திரட்டும் பொருட்டுச் சிறுவர்கள் கடல், கரையில் ஒதுக்கும்முத்துகளை எடுத்துவிளையாடும் செந்தில்பதி புரக்கும் குமரா உன்இதழ்முத்தம் தருக. அகத்தியமுனிவருக்கும்

தமிழ்கூறிய குழந்தையே ! முத்தம்தருக.
( 47 )

8. பருவ முற்று குடவ யிற்(று)ஒண் பணிலம் மொய்க்கும் துறையெலாம்
பருமு ரட்செங் கயல்கு திக்கும் பலப டத்தெண் திரைமுநீர்
பொருது குத்தும் திடர்அ னைத்தும் புறவு மொய்க்கும் புறவுசேர்
புளின வெற்(பு)எங் கணும்நி ரைக்கும் புளினம் மொய்க்கும் குவளைவாய்
அரும டல்கண்(டு) இனமெ னச்சென்(று) அளிகள் மொய்க்கும் புதியசூல்
அலவன் மொய்க்கும் குழிவழிச் சென்(று)அ லைகொ ழிக்கும் கரைஎலாம்
குருகு மொய்க்கும் பதிபு ரக்கும் குமரன் முத்தம் தருகவே
குறுமு னிக்கும் தமிழ்உ ரைக்கும் குழவி முத்தம் தருகவே.

**குறிப்புரை** : பருவம் முற்று= முத்தீனும்பருவம் முதிர்ந்து. பலபட= பலவாறு. முந்நீர்= கடல். பொருது= மோதி. திடர்= மணல்மேடு. புறவு= புறா. புறவு= அப்புறாக்கள். புளின வெற்பு= மணல்மேடாகியமலை. புள்ளினம்= பறவைக்கூட்டம். அருமடல்= அரிய இதழ். அலவன்= நண்டு. குருகு= நாரைப்பறவை.

**பொழிப்புரை** : முத்தீனும் பருவம் முதிர்ந்து குடம்போல்பருத்த ஒளியுடைய சங்குகள் நீர்த்துறைகள்தோறும் மொய்க்கும். பருத்த முரட்டுத்தனமான செங்கயல்மீன்கள் தெளிந்தஅலையில் பலவாறு துள்ளிக்குதிக்கும். கடல்நீர் மோதிக் குத்தும் மணல்மேடுகள் எங்கும் புறாக்கள் மொய்க்கும். அந்தப்புறாக்கள் மொய்க்கும் மணல்மேடாகிய மலைகளெங்கும் பறவைகூட்டம் மொய்க்கும். கருங்குளையின் அரிய இதழ்களைக்கண்டு அவை தமது இனம்என்று வண்டுகள் மொய்க்கும். முதற் சூல்கொண்ட நண்டுகள் மொய்க்கும் குழிவழியே சென்று அலைகள் கொழிக்கும் கரைஎங்கும் நாரைப் பறவைகள் மொய்க்கின்ற செந்தில்நகர் புரக்கும் குமரா முத்தம் தருக. அகத்திய முனிவர்க்கும் தமிழ் கூறிய குழந்தையே முத்தம்தருக.
( 48 )

9.

## வேறு

பைஅரவில் உச்சிகுழி யப்பொரும் குண்(டு)அகழ்ப்
படுகடல் பணிலமுத்தம்
பார்வையா லும்சிறிது பாரோம்இ தன்றிப்ப
சுங்கழை வெடித்தமுத்தம்
செய்யசிந் தையினும்இது வேணும்என்(று) ஒருபொழுதும்
சிந்தியோம் உததிவட்டத்
திரைமுழங் கக்கொழுந் திங்கள்வட் டக்குடைச்
செழுநிழற் சம்பராரி
பெய்யுமலர் வாளியை எடுத்துத்தெ ரித்துநாண்
இறுகப்பி ணித்தவல்வில்
ஈன்றகுளிர் முத்தத்தை முத்தம்என்(று) எண்ணுகோம்
இதழ்க்கமல முகையுடைக்கும்
துய்யமணி முத்தம்த னைத்தொடேம் உன்னுடைய
துகிரில்விளை முத்தம்அருளே
தோகைமே காரவா கனசெந்தி லாய்உனது
துகிரில்விளை முத்தம்அருளே.

**குறிப்புரை** : பைஅரவு= படமுடைய ஆதிசேடன். உச்சிகுழிய= உச்சந்தலையில் குழியுண்டாக. குண்டுஅகழ்= ஆழமாகத் தோண்டப்பட்ட. படு= விளையும். இதன்றி= இதுதவிர. கழை= மூங்கில். சிந்தியோம்= நினைக்கமாட்டோம். வட்ட உததி= வட்டமாகச் சூழ்ந்த கடல். திங்கள் வட்டக் குடை= நிலவாகிய வட்டமான குடை. சம்பராரி= மன்மதன். முத்தத்தை முத்தம் என்றுஎண்ணுகோம்= முத்தை முத்தாக நினைக்கமாட்டோம். இதழ்க்கமல முகை= இதழ்களால் மூடப்பட்ட தாமரைப்போது. துகிர்= பவள இதழ். மேகாரம்= மயில்.

**பொழிப்புரை** : பூமியைத் தாங்கும் படமுடைய ஆதிசேடனின் உச்சந்தலையில் குழியுண்டாகுமாறு சகரரால் தோண்டப்பட்ட கடலின்சங்குகள் ஈன்ற முத்தைச் சிறிதும் பாரோம். இதுதவிர,வளமான மூங்கில் வெடிக்கவந்தமுத்தை மனத்தாலும் இது வேண்டும் என்று ஒருபோதும் நினையோம். பூமியை வட்டமாகச் சூழ்ந்த கடல் ஆரவாரிக்க எழும் முழுநிலவாகிய குடைநிழலில் வாழும் மன்மதன், எய்ய ஆராய்ந்தெடுத்த மலரம்பினைத் தொடுக்கவைத்த நாணுடைய வலியகரும்பு வில் ஈன்ற முத்தை முத்தாக நினைக்கமாட்டோம். இதழ்களால் மூடப்பட்ட தாமரைப்போது மலரவந்த தூய அழகிய முத்தந்தனைத் தொடவுமாட்டோம். உன்பவள இதழில் விளையும் முத்தம் அருள்வாயாக. தோகை மயிலை ஊர்தியாகக்கொண்டு திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவனே ! உன் பவள இதழில் விளையும் முத்தம் அருள்வாயாக. ( **49** )

**10.** இறுகல்கருகு தல்முரி விலட்சுமி புடாயம்முள்
ளேறல்புகை ஏறல்செம்ம
ணேறல்வெச் சந்திருகன் மத்தகக் குழிவன்றி
இரவியொளி யிற்கரத்தல்
மறுவறு தகட்டிலோ ரத்திலுயர் தூக்கத்தின்
மன்னுமா தளைகவிர்ப்பூ
மாந்தளிர் முயற்குருதி செவ்வரத் தங்கோப
மருவுமணி வகையளிப்பேர்
முறுகல்வளி யேறல்கல் லேறல்சிப் பிப்பத்து
முரிதறிரு குதல்சிவப்பு
முருந்திற் குருத்துச் செருந்துருவி யிடையாடி
மூரிகுதை வடிவொதுங்க
றுறுமுகங் கக்கலொளி மட்கல்கர டென்னாத
துகிரில்விளை முத்தம்அருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்விளை முத்தம்அருளே.

**குறிப்புரை** : இச்செய்யுளில் முத்துகளில் உள்ள குற்றவகைகள் கூறியுள்ளார். இறுகல், கருகுதல் முதலியன குற்றவகைகளென்பர். இக்குற்றங்கள்பற்றிய விரிவான செய்தியை இரத்தினப் பரீட்சை நூலில் காணலாம்.

**பொழிப்புரை** : தோகைமயில் ஊர்தியுடைய செந்திலாண்டவனே !முத்தங்களுக்குரிய இறுகல் கருகுதல் முதலிய குற்றமேதும் இல்லாத உனது இதழ்முத்தம் தருக. **( 50 )**

**11.** கோதிவரி வண்(டு)மது உண்டுகுடி கொள்ளும்எம்
குழலுக்(கு) உடைந்துவிண்ணில்
குடிகொண்ட கொண்டல் குறுந்துளியின் நித்திலக்
கோவைஒரு கால்விரும்பேம்
காதில்உறும் வள்ளைமக ரக்குழை கடக்கும்எம்
கண்ணுக்(கு) உடைந்துதொல்லைக்
கயத்தில் குளித்தசேல் வெண்தரளம் என்னில்ஒரு
காலமும் கருதிநயவேம்
போதில்உறு பசுமடல் பாளைமென் பூகம்
பொருந்தும்எம் கந்தரத்தைப்
பொருவுறா வெள்வலம் புரிஆரம் இன்புறேம்
பெற்றோள் தனக்குடைந்த
சோதிவேய் முத்தம் தனைத்தொடேம் நின்னுடைய
துகிரில்விளை முத்தம்அருளே
தோகைமே காரவா கனசெந்தி லாய்உனது
துகிரில்விளை முத்தம்அருளே.

**குறிப்புரை** : கோதி= கிண்டி. உடைந்து= தோற்று. கொண்டல்= கார்மேகம். நித்திலக்கோவை= முத்தாரம். ஒருகால்= ஒருகாலத்தும். வள்ளைக்காது= வளப்பமுடைய காது. உடைந்து= தோற்று. தொல்லை= முன்னமே. சேல்= கெண்டைமீன். போதிலுறு= பூவோடு கூடிய. பூகம்= கமுகு. பொருந்தும்= ஒத்த. கந்தரம்= கழுத்து. பொருவுறா= ஒப்பாகாத. வலம்புரி ஆரம்= வலம்புரிமுத்துமாலை.

**பொழிப்புரை** : கோடுகளுடைய வண்டுகள் கிண்டி, தேன்பருகி அதிலேயே குடியிருக்கும் எமது கூந்தலுக்குத் தோற்று, வானில் குடியிருக்கும் கார்மேகத்தின் குறுந்துளியாகிய முத்துக்கோவையை ஒருகாலத்தும் விரும்பமாட்டோம். வளப்பமான காதிலணிந்த மகரக்குழையைத் தாண்டிச்செல்லும் கண்ணுக்குத் தோற்று முன்னரே குளத்தி மூழ்கிய கெண்டைமீன்போல் வெள்ளிய முத்தினை ஒருகாலத்திலும் விரும்பமாட்டோம். பூவோடு கூடிய பசியமடலுடைய மென்மையான பாக்குமரத்தை ஒத்த எமதுகழுத்துக்குஒப்பாகாத வலம்புரிச்சங்குகள் ஈன்றமுத்துமாலையாலும் இன்பமடையமாட்டோம். பெற்றதாயாகிய மூங்கிலைச் சாகடித்த ஒளிபொருந்திய முத்தினைத் தொடவுமாட்டோம். உனது பவளஇதழ்முத்தம் அருள்க. தோகைசேர் மயிலூர்தியுடைய செந்திற் பதியானே ! உனது பவளஇதழ் முத்தம்தருக. **( 51 )**

## 6. வாரானைப்பருவம்.

வாரானை= வருகை. வருகையை விரும்பும்பருவம். ஆனை= தொழிற்பெயர்விகுதி

***********

1. மூரிப் பகட்டு வரிவாளை முழங்கிக் குதிக்கக் கால்சாய்ந்து
முதிர விளைந்து சடைபின்னி முடங்கும் பசுங்காய்க் குலைச்செந்நெல்
சேரிக் கருங்கை மள்ளர்குயம் தீட்டி அரிந்த கொத்தினுக்குத்
தெண்முத்(து) அளப்பச் சிறுகுடிலில் சேரக் கொடுபோய் அவர்குவிப்ப
வேரிக் குவளைக் குழியில்வரி வெண்சங் கினங்கள் ஈற்றுளைந்து
மேட்டில் உகுத்த பருமுத்தை வெள்ளோ திமம்தன் முட்டைஎன
வாரிக் குவிக்கும் திருச்செந்தூர் வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : மூரி= வலிமை. பகடு= ஆண். சடைபின்னி= ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு. கால்சாய்ந்து= அடிசாய்ந்து. முடங்கும்= வளைந்துகிடக்கும். சேரி= குடியிருப்பு. கருங்கை= வலியகை. மள்ளர்= உழவர். குயம்= அரிவாள். அவர்= உழவர். வேரி= தேன். குழி= பள்ளம். ஈற்றுளைந்து = கருவுயிர்த்து. வடிவேல்= கூரிய வேல்.

**பொழிப்புரை** : வலிமையுடைய ஆண்வாளைமீன் முழக்கமுடன் தாவிக்குதிக்க, அதனால் அடிசாய்ந்து முதிர்ந்து விளைந்து ஒன்றுடன்ஒன்று பின்னிக்கொண்டு வளைந்துகிடக்கும் வளமான நன்குகாய்ந்த செந்நெல்குலையை உழவர் குடியிருப்பில் வாழும் உழவர்கள், தீட்டிய அரிவாளால் அறுத்த நெற்குலைக்கு விலையாக வாங்குவோர் கொடுத்த முத்தினை ஒருசேரக் கொண்டுபோய் உழவர்தமது சிறிய குடிசையில்குவிக்க, தேனுடைய குவளமலர் மலர்ந்துள்ள குளத்தில் வாழும் கோடுகளுடைய வெண்மையான சங்கின்கூட்டம் மேட்டுநிலத்தில் கருவுயிர்த்த பெரிய முத்துக்களை வெண்மையான அன்னப்பறவை தனது முட்டை என்றுநினைத்து வாரிக்கொண்டுபோய்க் குவிக்கின்ற திருச்செந்தூர் வடிவேல் முருகா ! வருக. கலவைச்சந்தனம் பூசிய, வளர்கின்ற தென்னங்குரும்பை ஒத்த கொங்கைகளுடைய வள்ளியின் கணவனே ! வருக **( 52 )**

**2.** புள்ளம் அரிந்த கதிர்ச்செந்நெற் போரில் பகடு தனைநெருங்கப்
பூட்டி அடித்து வைகளைந்து போதக் குவித்த பொலிக்குவையை
விள்ள அரிய குடக்காற்று வீசிப் பதடி தனைநீக்கி
வெள்ளிக் கிரிபோல் கனகவட மேரு கிரிபோல் மிகத்தூற்றிக்
கள்ளம் எறியும் கருங்கடைக்கண் கடைசி பிரித்த மணிமுத்தைக்
களத்தில் எறிய அம்முத்தைக் கண்டு குடித்த கட்குவிலை
மள்ளர் அளக்கும் திருச்செந்தூர் வடிவேல் முருகா வருகவே

வளரும் களபக் குறும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : புள்ளம்= அரிவாள். பகடு= எருமைக்கடா. பூட்டி= கட்டி. வைபோதக் களைந்து= வைக்கோல்போக நீக்கி. பொலிகுவை= தூற்றாத நெற்குவியல். விள்ள அரிய= சொல்லுதற்கரிய வேகமுடன் வீசும். குடக்காற்று= மேல்காற்று. பதடி= பதர். வெள்ளிக்கிரி= கயிலைமலை. கனகவட மேருகிரி= வடக்கில் உள்ள மேருமலை. கள்ளம்= பொய். கடைசி= உழத்தி. மணிமுத்து= அழகிய முத்து. கட்குவிலை= கள்ளுக்கு விலை. மள்ளர்= உழவர்.

**பொழிப்புரை** : அரிவாளால் அரிந்த செந்நெற்கதிர்ப் போரில் எருமைக்கடாக்களை நெருக்கமாகப் பூட்டி அடித்து வைக்கோல்போகநீக்கிக் குவித்த தூற்றாத நெற்குவியலை, மிகவேகமாக வீசும் மேல்காற்றில் பதர்போகத்தூற்றி, கயிலைமலைபோல் வடக்கில் உள்ளபொன்மலை போல் பொய்ப்பார்வை பார்க்கும் உழத்தியர் நெல்லைப்பிரித்துக் குவித்தபின், களத்தில் எறிந்த அழகிய முத்தினைக் கண்ட உழவர் தாம்குடித்த கள்ளுக்கு விலையாக அளந்துதரும் சிறப்புடைய திருச்செந்தூர் வடிவேல் முருகா ! வருக. கலவைச்சந்தனம் பூசிய வளரும்தென்னங்குரும்பை ஒத்த கொங்கைகளுடைய வள்ளிக்குக் கணவனே ! வருக. ( 53 )

3. தேட அரிய மணிஅரைஞாண் சேர்க்க வருக விரற்(கு)ஆழி
செறிக்க வருக திலகநுதல் தீட்ட வருக மறுகில்விளை
யாட வருக மடியில்எடுத்(து) அணைக்க வருக புதுப்பனிநீ
ராட்ட வருக நெறித்தமுலை அமுதம் பருக வருகமுத்தம்
சூட வருக உடல்புழுதி துடைக்க வருக ஒருமாற்றம்
சொல்ல வருக தள்ளிநடை தோன்ற வருக சோதிமணி
மாடம் நெருங்கும் திருச்செந்தூர் வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : ஆழி= மோதிரம். நுதல் திலகம். மறுகு= தெரு. நெறித்த முலை= (பால்கட்டி வன்மைபெற்ற முலையைக் கையால்) பிசைந்து மென்மைப்படுத்தியமுலை. மாற்றம்= சொல். தள்ளிநடை= குறுகுறுநடை.

**பொழிப்புரை** : தேடிப்பெறுதற்கரிய மணிகள் கட்டிய அரைஞாண் கட்டவருக. விரலுக்கு மோதிரம் பூட்டவும், நெற்றியில் பொட்டிடவும், தெருவில் விளையாடவும், நான் உன்னை என்மடியில் வைத்துக்கட்டி அணைத்துக்கொள்ளவும், புதிய குளிர்ந்தநீரால் நீராட்டவும், கையால் சற்றேபிசைந்து மென்மைப்படுத்திய முலைப் பால்குடிக்கவும், என்முத்தம் பெறவும், உடலின் புழுதி துடைக்கவும், ஒரேஒரு சொல்லாவது சொல்லவும், குறுநடை நடந்தும் வருக. ஒளிபொருந்திய அழகிய மாளிகைகள் நெருங்கிய திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள வடிவேல் முருகா ! வருக. கல்வைச்சந்தனம் பூசிய, வளரும் தென்னங்குரும்பை ஒத்த கொங்கைகளுடைய வள்ளிக்குக் கணவனே! வருக . ( 54 )

4. இறுகும் அரைஞாண் இனிப்பூட்டேன் இலங்கும் மகர குண்டலத்தை
எடுத்துக் குழையின் மீ(து)அணியேன் இனிஉன் முகத்துக்(கு) ஏற்றஒரு
சிறுகும் திலகம் தனைத்தீட்டேன் திருக்கண் மலர்க்கு மைஎழுதேன்
செம்பொன் கமலச்சீரடிக்குச் சிலம்பு திருத்தேன் நெறித்துவிம்மி
முறுகு முலைப்பால் இனி(து)ஊட்டேன் முகம்பார்த்(து) இருந்து மொழிபகரேன்
முருகா வருக சிவசமய முதல்வா வருக திரைகொழித்து
மறுகும் அலைவாய்க் கரைசேர்ந்த மழலைச் சிறுவா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : இறுகும்= நெகிழாதிருக்கும். குழை= காதணி. சிறுகும்= சிறிய.. செம்பொன் கமலம்= சிறந்த அழகிய தாமரை. விம்மி முறுகு முலை நெறித்துப் பால் இனிது ஊட்டேன். முறுகு= கடினப்பட்டுள்ள. மறுகும்= சுழலும்.

**பொழிப்புரை** : முருகா ! வருக. வராவிட்டால், நெகிழாதிருக்கும் அரைஞாணை இனிமேல் பூட்டேன், ஒளிரும் மகர குண்டலத்தை எடுத்துக் குழையில் அணியமாட்டேன், உன்முகத்துக்கு ஏற்ற ஒருசிறிய பொட்டும் இனிமேல் வைக்கமாட்டேன். அழகிய கண்மலர்க்கு மைஎழுதமாட்டேன், சிறந்த அழகிய தாமரை போன்ற திருவடிகளுக்குரிய சிலம்பினைத் திருத்தமாட்டேன், பாலின்மிகுதியால்

பருத்துக் கடினப்பட்டுள்ள என்கொங்கைகளை நெறித்து மென்மைப்படுத்தி இனிது பாலூட்டமாட்டேன். உன்முகம்பார்த்துப் பேசவும்மாட்டேன், சிவசமய முருகா ! வருக. அலைகொழித்துச்சுழலும் கரையிலுள்ள திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள மழலைச் சிறுவா ! வருக.கலவைச்சந்தனம் பூசிய வளரும் தென்னங்குரும்பை ஒத்த கொங்கைகளுடைய வள்ளி கணவா வருக. **( 55 )**

**5.** எள்ளத் தனைவந்(து) உறுபசிக்கும் இரங்கிப் பரந்து சிறுபண்டி
எக்கிக் குழைந்து மணித்துவர்வாய் இதழைக் குவித்து விரித்(து)அழுது
துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து தொட்டில் உதைத்துப் பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத் தோளின் மகரக் குழை தவழ
மெள்ளத் தவழ்ந்து குறுமூரல் விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து வேண்டும் உமையாள் களபமுலை
வள்ளத்(து) அமு(து)உண்(டு) அகமகிழ்ந்த மழலைச் சிறுவா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : உறு= சேர்ந்த, இரங்கி= வருந்தி. பரந்து= அங்குமிங்கும் அலைந்து. பண்டி= வயிறு. புடைபெயர்ந்து= பக்கத்தில் திரும்பி. வேண்டும் அமுது= விரும்பிய அளவு தாய்ப்பால்.

**பொழிப்புரை** : தனக்குவந்த மிகச்சிறுபசிக்கும் வருந்தி, அங்குமிங்கும் அலைந்து தன் சிறுவயிற்றை எக்கி, நொந்து அழகிய பவளஇதழ்களைக் குவித்தும் விரித்தும் அழுது, துள்ளியும் துடித்தும் பக்கத்தில் திரும்பி, தொட்டிலை உதைத்தும், கைப்பெருவிரலைச் சூப்பியும், கடைவாயில் எச்சில்ஒழுக, தோள்களில் மகரக்குழை தவழ மெதுவாகத் தவழ்ந்து புன்சிரிப்புக் காட்டி உமையவள் மடியில் ஏறிஇருந்து அவளின் முகத்தைப் பார்த்து விம்மியும் பொருமியும் விரும்பியஅளவு தாய்ப்பால் பருகிமனம் மகிழ்ந்த மழலைபேசும் சிறுவனே ! வருக. கலவைச்சந்தனம் பூசிய வளரும் தென்னங் குரும்பைஒத்த கொங்கைகளுடைய வள்ளிகணவனே வருக. **( 56 )**

**6.** வெண்மைச் சிறைப்புள் ஓதிமங்கள் விரைக்கே தகையின் மடலெடுத்து
விரும்பும் குழவி எனமடியின் மீதே இருத்திக் கோதாட்டித்
திண்மைச் சுரிசங் கினில்குவளைத் தேறல் முகந்து பாலூட்டிச்
செழுந்தா மரைநெட் டிதழ்விரித்துச் சேர்த்துத் துயிற்றித் தாலாட்டப்
பெண்மைக் குருகுக்(கு) ஒருசேவல் பெரிய குருகு தன்வாயில்
பெய்யும் இரையைக் கூர்அலகு பிளந்து பெட்பின் இனிதளிக்கும்
வண்மைப் புதுமைத் திருச்செந்தூர் வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : சிறை= சிறகு. விரைக் கேதகை= மணக்கும் தாழை. மடல்= வெண்மையான பூ.
கோதாட்டி= சீராட்டி. தேறல்= தேன். குருகு= நாரை. வாயில்[= வாயால். பெட்பு= விருப்பம்.

**பொழிப்புரை** : வெண்மையான சிறகுகளையுடைய அன்னப்பறவைகள் மணக்கும் தாழையின் பூவினையெடுத்து அதனைத் தான்விரும்பும் குழந்தையாக எண்ணித்தன் மடியில் இருக்கச்செய்து சீராட்டி, உறுதியான வளைந்த சங்கினால் குவளைமலரில் தேன்முகந்து அதனைப் பாலாக ஊட்டி, வளமான தாமரைமலரின் நீண்ட இதழ்களை விரித்து அதில் கிடத்தி, தூங்கவைத்துத் தாலாட்டும் வளமும்; பெண்நாரைக்கு ஒத்தபெரிய ஆண்நாரை தனது அலகால் கொண்டுவந்த இரையைப் பெண்நாரையின் கூரிய அலகைப்பிளந்து விருப்புடன் தரும் புதுமையும் கொண்ட திருச்செந்தூர் வடிவேல் முருகா வருக. கலவைச்சந்தனம் பூசிய, வளர்கின்ற தென்னங்குரும்பைஒத்த கொங்கைகளுடைய வள்ளிகணவனே வருக. **( 57 )**

**7.** ஓடைக் குளிர்தண் துளிப்பனியால் உடைந்து திரையில் தவழ்ந்தேறி
ஒளிரும் புளினத்(து) இடைஒதுங்கி உறங்கும் கமடத் தினக்கடந்து
கோடைக் குளிர்காற்(று) அடிக்கஉடல் கொடுகி நடுங்கி ஊன்கழிந்த
குடக்கூன் பணிலத்(து) உட்புகுந்து குஞ்சுக்(கு) இரைகொடுக்கும்
பேடைக் குருகுக்கு ஒருசேவல் பெரிய குருகின் சிறைப்புறத்தின்
பிள்ளைக் குருகு தனைஅணைத்துப் பிரச மடல்கே தகைப்பொதும்பின்

வாடைக்கு ஒதுங்கும் திருச்செந்தூர் வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : உடைந்து= உடல்தளர்ந்து. புளினம்= மணல்மேடு. கமடம்= ஆமை. கொடுகி= உடல்குளிர்ந்து. ஊன்கழிந்த= சங்குப்பூச்சியின் சதையற்ற. சிறைப்புறத்தின்= சிறகால். பிரசம்= தேன். கேதகையின் பொதும்பர்= தாழைச் சோலை.

**பொழிப்புரை** : குளிரும் தண்ணிய பனித்துளியால் உடல்தளர்ந்து ஓடையின் அலைவழியே தவழ்ந்துபோய் வெண்மணலால் ஒளிரும் மணல்மேட்டில் ஏறிஒதுங்கி உறங்கும் ஆமையைக்கடந்து குளிர்காற்றடிக்க, ஆமை உடல்குளிர்ந்து நடுங்கி சங்குப்பூச்சியில்லாத குடம்போல் பருத்துவளைந்த சங்கினுள் புகுந்து தன்குஞ்சுக்கு இரைதரும். பெரிய ஆண்நாரையொன்று தன்ஒரு பெண்நாரையின் குஞ்சினைத் தன் சிறகால் அணைத்துக்கொண்டு தேன்பொருந்திய மடலுடைய தாழைச் சோலையில் வாடைக்கு ஒதுங்கிக்கிடக்கும் திருச்செந்தூர் வடிவேல் முருகா வருக. கலவைச்சந்தனம் பூசிய, வளர்கின்ற தென்னங்குரும்பை போன்ற கொங்கைகளுடைய வள்ளிகணவனே ! வருக **( 58 )**

8. விண்டு மாவின் கனிதடத்தின் மீதே வீழக் குருகினங்கள்
வெருவிப் பிரியக் கயல்வெகுண்டு வெடிபோய் மீள மண்டூகம்
கண்டு பாய வரிவாளை கழிக்கே பாயக் கழிக்கானல்
கம்புள் வெகுண்டு துண்ணெனக்கண் கடைதான் விழித்துத் தன்பார்ப்பைக்
கொண்டு போய்அக் கருவாழைக் குலைக்கே பாயக் குடக்கனியின்
குறுங்கால் பலவு வேர்சாய்ந்த குழிக்கே கோடி கோடிவரி
வண்டு பாயும் திருச்செந்தூர் வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : விண்டு= காற்று. தடம்= குளம். குருகினங்கள்= பறவையினங்கள். வெருவிப் பிரிய= அஞ்சிப்பறந்தோட. வெடிபோய்= தாவி. மண்டூகம்= தவளை. வாளை=வாளைமீன். கழி= உப்பங்கழி. கம்புள்= சம்பங்கோழி. பார்ப்பு= குஞ்சு. கருவாழை= வாழையினத்துள் ஒருவகை. குடக்கனி= பலாக்கனி. வேர்சாய்ந்த= வேர்ப்பலாபழுத்த.

**பொழிப்புரை** : காற்றினால் மாங்கனி குளத்தில் விழ, அவ்வொலியால் பறவையினங்கள் அஞ்சிப் பறந்தோட, கெண்டைமீன் சினந்து தாவி மீண்டுவர, அதுகண்டு தவளைபாய, வரிகளுடைய வாளைமீன் உப்பங்கழிக்குப் பாய,கடற்கரைச் சோலையில்வாழும் சம்பங்கோழி திடுக்கிட்டுத்தன் கடைக்கண் விழித்துப்பார்த்துத் தன்குஞ்சைத் தூக்கிக்கொண்டுபோய் அங்குள்ள கருவாழைக்குலைக்கு விரைந்து செல்ல, குறுகிய அடியுடைய வேர்ப்பலாமரத்தின் கனிபழுத்த குழிக்குக் கோடிகோடி வண்டுகள் பாயும் வளமுடைய திருச்செந்தூர் வடிவேல் முருகா ! வருக. கலவைச்சந்தனம் பூசிய, வளரும் தென்னங்குரும்பை ஒத்த கொங்கைகளுடைய வள்ளிகணவனே ! வருக. **( 59 )**

9. பேரா தரிக்கும் அடியவர்தம் பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறும் கொடுக்க வரும்பிள்ளைப் பெருமான் என்னும் பேராளா
சேரா நிருதர் குலகலகா சேவற் கொடியாய்த் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட செல்வா என்(று)உன் திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர் பரவிப் புகழ்ந்து விருப்புடன்அப்
பாவா வாஎன்று உனைப்போற்றிப் பரிந்து மகிழ்ந்து வரஅழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே.

**குறிப்புரை** : பேராதரிக்கும்= பெரும்பத்திசெலுத்தும். பேறும்= வீடுபேறும். பிள்ளைப்பெருமான்= குழந்தைத் தெய்வம். பேராளன்= புகழோன். சேரா= பகைவர். பாரா= பார்த்து. முலைத்தா= வளர்ப்புத்தாயர். வழக்கு= வழக்கம்.

**பொழிப்புரை** : பெரும்பத்திமைசெய்யும் அடியவர்களுக்கு இம்மையில் பெருவாழ்வும், பிறப்பைஒழித்து வீடுபேறும் கொடுக்கவந்த குழந்தைத்தெய்வம் என்று புகழ்வாய்ந்தவனே ! பகைவராகிய அசுரர் குலத்தை அழித்தவனே ! சேவற்கொடி உயர்த்தவனே ! திருச்செந்தூர்த் தெய்வமே ! தேவர் சிறைமீட்ட செல்வனே என்று உனது திருமுகம் பார்த்து மகிழ்வுடன் வளர்ப்புத்

தாய்மார் விருப்புடன் உன்னைப்பரவியும் புகழ்ந்தும் வருமாறு அழைத்தால் நீ வராதவழக்கம் இல்லை. வடிவேல் முருகா வருக. கலவைச்சந்தனம் பூசிய, வளரும் தென்னங்குரும்பைபோன்ற கொங்கைகளுடைய வள்ளி கணவனே வருக. ( 60 )

10. **வேறு.**

கலைதெரி புகலி வளமுற மருவு கவுணிய வருக வருகவே
கருணையின் உரிமை அடியவர் கொடிய கலிகெட வருக வருகவே
சிலைபொரு புருவ வனிதையர் அறுவர் திருவுளம் மகிழ வருகவே
சிறுதுளி வெயர்வு குதிகொள உனது திருமுகம் மலர வருகவே
கொலைபுரி விகட மணிமுடி நிருதர் குலம்அற வருக வருகவே
குருமணி வயிரம் இருசிகை நெடிய குழைபொர வருக வருகவே
மலைமகள் கவுரி திருமுலை பருகு மழவிடை வருக வருகவே
வளைஉமிழ் தரளம் அலையெறி நகரின் வரபதி வருக வருகவே.

**குறிப்புரை** : கலைதெரி= கலைகளில் தேர்ந்த. புகலி= சீர்காழி. கவுணிய= கவுணிய குலத்துத் திருஞானசம்பந்தரே, கலி= துன்பம். சிலைபொரு= வில்லொத்த. அறுவர்= கார்த்திகைமாதர். குதிகொள= சிந்த. விகடம்= அழகு. குருமணி வயிரம்= ஒளிபொருந்திய வயிரமணி. இருசிகை= மிக்க தலைமுடி. வரபதி= மேலான தலைவன்.

**பொழிப்புரை** : சீர்காழி வளம்பெறப் பிறந்த கலைகளில் தேர்ந்த கவுணியர் குலத்துத் திருஞானசம்பந்தரே வருகவருக. அடியவர் துன்பம் தீரக்கருணையுடன்கூடிய உரிமையுடன் வருக வருக. வில்லொத்த புருவமுடைய கார்த்திகை மாதர் அறுவர்திருவுளம் மகிழ, சிறிய வியர்வைத்துளி சிந்த உனது திருமுகம்மலர, கொலைசெய்யும் அசுரர்குலம் அற, மிக்க தலைமுடியில் சூட்டிய ஒளிபொருந்திய வயிரமணியின் ஒளி காதணியுடன் மோத வருக வருக. மலைமகளாகிய பார்வதிதேவியின் திருமுலைப்பால் பருகு இளங்காளையே ! வருக வருக. சங்குகள் ஈன்ற முத்துகளை அலைகள் கரையில்எறியும் செந்தில்நகரில் எழுந்தருளியுள்ள மேலான தலைவனே ! வருக வருக.

**குறிப்பு** : திருஞானசம்பந்தர் முருகனல்லர் என்று முன்னேகூறியதை ( பாஎண் 33) இங்கு நினைக. ( 61 )

11. அணிநெடு மவுலி எறிசிறு புழுதி அழகுடன் ஒழுக வருகவே
அடியிடும் அளவில் அரைமணி முரலும் அரவொலி பெருக வருகவே
பணிவிடை புரிய வருமட மகளிர் பரவினர் புகழ வருகவே
பலபல முனிவர் அனைவரும் உனது பதமலர் பரவ வருகவே
பிணிமுக முதுகில் அரியணை அழகு பெறவரு முருக வருகவே
பிறைபொரு சடிலர் தம(து)இடம் மருவு பிடிபெறு களிறு வருகவே
மணிஇதழ் ஒழுகும் அமு(து)உகு குதலை மழவிடை வருக வருகவே
வளைஉமிழ் தரளம் அலைஎறி நகரில் வரபதி வருக வருகவே.

**குறிப்புரை** : மவுலி= கிரீடம். எறிசிறு புழுதி= ஒட்டிய நுண்ணிய புழுதி. ஒழுகவருக= நடந்துவருக. அரவொலி= ஆரவாரம். பரவினர்= பரவி. பிணிமுகம்= மயில். பொரு= பொருந்திய. பிடி= உமையவள். களிறு= ஆண்யானை. மணி இதழ்= அழகிய உதடு. மழவிடை= இளங்காளை.

**பொழிப்புரை** : அழகிய உயர்ந்த கிரீடத்தில் ஒட்டிய நுண்ணிய புழுதியின் அழகுடன் நடந்து வருக. அடிஎடுத்து வைக்குமளவில் இடுப்பில்கட்டிய மணிகளின் மென்மையான ஒலியின் ஆரவாரம் பெருக வருக. பணிவிடைசெய்யவரும் இளம்மகளிர் பரவிப் புகழவருக. மிகப்பல முனிவர் அனைவரும் உனது திருவடித்தாமரையை வணங்கவருக. மயிலின் முதுகில் உள்ள அரியணை அழகுபெற வருக. பிறைபொருந்திய சடையுடைய சிவபிரானின் இடப்பால்உள்ள பெண்யானையாம் உமையவள் ஈன்ற ஆண்யானையே வருக. அழகிய உன்இதழில் ஒழுகும் அமுதுடன் வெளிப்படும் குதலைபேசும் இளங்காளையே வருக. சங்குகள் ஈன்ற முத்துகளை அலைகள் கரையில் எறியும் செந்தில் நகரில் எழுந்தருளியுள்ள மேலான தலைவனே வருக. ( 62 )

## 7, அம்புலிப்பருவம்.

நிலாவை விளையாட அழைக்கும் பருவம்.

*********

1, கலையால் நிரம்பாத கலையுண்(டு) நினக்குநிறை
கலையுண்(டு) இவன்தனக்கு
களங்கம்மரு குறமான் உனக்குண்டு குறமான்
கருத்(து)உண்(டு) இவன்தனக்கு
தொலையாத கணம்உண்(டு) உனக்குமங் கலகனத்
தொகைஉண்(டு) இவன்தனக்குத்
துளிஅமுதம் உண்(டு)உனக்(கு) இவனுக்கு மாறாத
சொல்லமுதம் உண்(டு)உனக்குக்
கொலைஆட ராவழிப் பகையுண்டு கடுவிடம்
கொப்புளிக் கும்கட்செட்விக்
கோளரா வைக்கொத்தி எறியும்மே காரம்இக்
குமரனுக்(கு) உண்டுகண்டாய்
அலைஆழி சூழ்திருச் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : கலையால்= ஒளியால். நிரம்பாத கலை= குறைந்த சரீரம் - உடல்.. நிறைகலை= முழுமையான ஒளி - ஞானம். களங்கம் மருமான்= களங்கமாகிய குற்றமுடைய மான். குறமான் = வள்ளிக்குறத்தியாகிய மான். தொலையாத கணம்= உன்னை நீங்காத உடுக்கணம். மங்கலக்கணம்= மங்கலம்செய்யும் சிவகணம். துளி அமுதம்= துளிக்கும் அமுதம். சொல்லமுதம்= புகழாகிய அமுதம் வழிப்பகை= வழிவழிப்பகை. மேகாரம்= மயில். அரவின்முடி= ஆதிசேடனின் தலை.

**பொழிப்புரை** : நிலவே ! ஒளியால் முழுமைபெறாத குறையுடம்பு உனக்கு உண்டு. குன்றாது நிறைந்த ஒளிமயமான உடம்பே இவனுக்கு உண்டு. களங்கமாகிய குற்றமுடைய மான் உனக்கு உண்டு. இவனுக்குக் குறத்தியாகிய மான் உண்டு. உன்னைநீங்காத உடுக்கணம் உனக்கு உண்டு. இவனுக்கு மங்கலம்செய்யும் சிவகணம் உண்டு. துளிக்கும் அமுதம் உனக்கு உண்டு. இவனுக்கு என்றும் மாறாத நிறைபுகழ் அமுதம் உண்டு. கொலைசெய்யப் படமெடுத்தாடும் பாம்பின் பகை உனக்கு வழிவழியுண்டு. கொடிய விடம்பெருகும் பாம்பைக் கொத்திஎறியும் மயில் இவனுக்கு உ.ண்டு. எனவே அம்புலியே ! அலைசூழ்ந்த கடலுடைய திருச்செந்தில் வடிவேலனுடன் விளையாடவா. ஆதிசேடனின் தலையைநெளிக்கும் மயிலின் முதுகில் ஏறிவரும் இக்குமரனுடன் அம்புலியே விளையாடவா. **( 63 )**

2. மாமோக மண்டலம் அகற்றிஅறி(வு) என்னும்முழு
மண்டலத் தைத்தொடுத்து
வடவைமுக மண்டலத்(து) அழலால்உ ருக்கிஇனன்
மண்டலத்(து) ஊடுபுக்குச்
சோமோத அக்கிரண மண்டலத்(து) அமுதத்
துளித்திவலை பருகிஉடலைச்
சோதிமண் டலமென விளக்கும்அவர் இவனுடைய
துய்யமுக மண்டலத்தை
ஏமோ கருத்துற இருத்திப்பெ ரும்பரத்(து)
எல்லைமண் டலம்எய்தலாம்
என்றுகொண்(டு) இவன்மண் டலச்சக்ர நிலைஆ(று)
எழுத்தில்ஈ டேறுவர்உனக்(கு)
ஆமோ பெருக்கம்என் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்

அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மாமோக மண்டலம்= மிகப்பெரிய மோகபூமி. தொடுத்து= ஆரம்பித்து. வடவைமுகம்= ஊழித்தீ முகம்போன்ற. மண்டலத்தைத் தழலால்= ( மூலாதாரத்தில் உள்ள ) அக்கினி மண்டலத்தீயால். இனன் மண்டலத்து= ( இருதய கமலத்திலுள்ள ) சூரியமண்டலத்தின். ஊடு= நடுவில். சோமோதயம்= சந்திரன் உதித்தலையுடைய. கிரணம்= ஒளியுள்ள. சோதிமண்டலம் என= சிவமண்டலமாக. விளக்கும் அவர்= ஒளியூட்டும் மெய்ஞ்ஞானிகள். ஏம்= மயக்கம். ஓ= நீங்கிய. பெரும்= பெருமைதங்கிய. பரத்து= பிரமத்தின் - பரம்பொருளின். என்றுகொண்டு= என்றுநினைத்து. மண்டலம்= வட்டம். நிலை- நிற்றலையுடைய. ஈடேறுவர்= கடைத்தேறுவர். உனக்குப் பெருக்கம் ஏன்= நீ காலம்நீட்டிப்பது ஏன்.

**பொழிப்புரை** : மிகப்பெரிய மோகபூமியை விடுத்து, முழுமையான அறிவுஎன்னும் மண்டலத்தில் தொடங்கி, வடவாமுகத்தீப் போன்ற மூலாதாரத்தில் உள்ள அக்கினிமண்டலத்தீயால் உருக்கி, இதயகமலத்தில் உள்ள சூரிய மண்டலத்தின் ஊடு புகுந்து, சந்திரன் உதித்ததுபோன்ற ஒளியுடைய சிவமண்டலமாக விளக்கும் மெஞ்ஞானிகள், இவனுடைய தூய வட்டமான முகமண்டலத்தை மயக்கம் நீங்கிய மனத்தில் இருத்தி, பெருமைதங்கிய பரம்பொருளின் எல்லை வட்டத்தைஅடையலாம் என்றுகொண்டு, இவனுடைய வட்டமாக நிற்றலையுடையதிருவாறெழுத்தின் மூலம் கடைத்தேற்றம் பெறுவர். நீ காலம்நீட்டிப்பதேன்? திருச்செந்தூர் வடிவேலனுடன் அம்புலியே ! விளையாடவா. ஆதிசேடனின் தலையைநெளிக்கும் மயிலின் முதுகில் வரும் குமரனுடன் அம்புலியே ! விளையாட வா. ( 64 )

4. வெறிஆர் இலைத்தொடைத் தக்கன்அழல் வேள்வியை
வெகுண்டுபகல் பல்உகுத்து
வெள்ளிவிழி யைக்கெடுத்(து) அயிராவ தப்பாகன்
வே(று)உருக் கொடுபறக்கச்
செறிஆ டகத்தகட்டு இதழ்முளரி நான்முகன்
சென்னியைத் திருகிவாணி
செய்யதுண் டம்துண்டம் ஆக்கிஅத் தக்கன்
சிரத்தைஒரு வழிப்படுத்திப்
பொறிஆர் அழற்கடவுள் கைத்தலம் அறுத்துவிண்
புலவர்முப் பத்துமூவர்
போனவழி ஒருவர்போ காமல்உன் உடலையும்
புழுதியில் தேய்த்ததெல்லாம்
அறியாத(து) அல்லநீ செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : வெறி= நறுமணம். இலை= பூவிதழ். தொடை= மாலை. பகல்= சூரியன். வெள்ளி= சுக்கிரன். அயிராவதப்பாகன்= தேவேந்திரன். வேறுஉரு= குயிலுருவம். ஆடகத்தகடு= பொற்றகடு. முளரி= தாமரைமலர். துண்டம் துண்டம் ஆக்கி= மூக்கினை அறுத்து. அழல்கடவுள்= அக்கினிதேவன். தக்கன் சிரத்தை ஒருவழிப்படுத்தி= தக்கன்தலையை வீழ்த்தி ஆட்டுத்தலையனாக்கி. விண்புலவர்= தேவர்கள். உன்னுடலையும் புழுதியில் தேய்த்து= சந்திரனாகியஉன் உடம்பைப் பூமியில் காலால் தேய்த்து.

**பொழிப்புரை** : நறுமணம் பொருந்திய பூவிதழ்களால் ஆன மாலை அணிந்த தக்கன்செய்த அழல்வேள்வியைச் சினந்து, சூரியனின் பல்லை உதிர்த்து, சுக்கிரனின் கண்களைக் கெடுத்து, அயிராவதத்தில் ஊர்ந்துவரும் இந்திரன் குயிலுருக்கொண்டு பறக்க, பொன்தகடுஒத்த இதழ்களுடைய தாமரையில் இருக்கும் நான்முகன் தலையைத் திருகி, கலைமகளின் மூக்கினைத் துண்டாக்கி,அந்தத் தக்கன் தலையை ஆட்டுத்தலையாக்கி, தீப்பொறியுடைய அக்கினிதேவனது கையை அறுத்து, வானுலகத் தேவர்கள் முப்பத்து மூவகையினரும் ஒருவர் போனவழி ஒருவர்போகாமல் செய்து, உன்னுடலையும் புழுதியில் காலால் தேய்த்த செய்திகள் அனைத்தும் நீ அறியாதனவல்ல, அறிந்தனவே. அத்தகைய பேராற்றலுடைய செந்தில் வடிவேலனுடன் அம்புலியே !

விளையாடவா. ஆதிசேடனின் தலைநெளிக்கும் மயிலின் முதுகில்வரும் குமரனுடன் அம்புலியே ! விளையாடவா.(66)

5. விடம்ஒழுகு துளைமுள் எயிற்றுவன் கட்செவி
விரிக்கும் பணாடவிஅரா
மென்பொறி உடல்பெரும் பகுவாய் அராவடிவை
வெம்பசி யெடுத்துவெம்பிக்
குடதிசைக் கோடையைப் பருகிக் குணக்(கு)எழும்
கொண்டலை அருந்திவாடைக்
கொழுந்தையும் தென்றலையும் அள்ளிக் குடித்துக்
கொழுங்கதிரை உண்ட(து)இனிஉன்
இடமொழிய வேறோர் இலக்கில்லை நீஅதற்(கு)
எதிர்நிற்க வல்லையல்லை
இவனுடன் கூடிவிளை யாடிநீ இங்கே
இருக்கலாம் இங்குவந்தால்
அடல்புரியும் மயிலுண்(டு) உனக்(கு)உதவி ஆகையால்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : வன்கண் செவி= கொடிய பார்வையுடைய கண்ணையே காதாகக் கொண்ட. விரிக்கும் பண அடவி= விரிக்கின்ற படங்களுடைய காடு, பகுவாய்= பிளந்தவாய்.. அரா= பாம்பு. அடிவை= அடிவயிற்றில் வைத்த. வெம்பி=சினந்து. குடதிசை= மேற்குத்திசை. கோடை= மேலைக் காற்று. குணக்கு= கிழக்கு. கொண்டல்= கீழைக்காற்று'. கதிர்= சூரியன். உன்னிடமொழிய= உன்னைத் தவிர. இலக்கு= குறி. எதிர் நிற்க வல்லையல்லை= எதிர்த்து நிற்கும் ஆற்றல் இல்லாதவன் நீ. அடல்புரியும்= வெற்றி மாலை சூடும்.

**பொழிப்புரை** : விடம் ஒழுகும் துளையுடைய முள்போல் கூர்மையான பற்களையும், கொடியபார்வையுடைய கண்ணையே செவியாகக் கொண்டதும், பிளந்த வாயினையுடையதும் ஆகிய பாம்பு, தனது அடிவயிற்றுக் கொடியபசி தீர்க்கச் சினந்து; மேற்குத்திசையிலிருந்து வீசும் கோடை எனும்காற்றையும், கிழக்குத்திசையிலிருந்து வீசும் கொண்டல்எனும் காற்றையும் அருந்தி, வடக்குத் திசையிலிருந்து இருந்து வீசும் வாடை எனும் காற்றையும், தெற்குத்திசையிலிருந்து வீசும் தென்றல் எனும் காற்றையும் உண்டது. இனிஅப்பாம்பு உண்ண உன்னைத்தவிர வேறு இலக்கு இல்லை. நீஅப்பாம்பை எதிர்த்து நிற்கும் ஆற்றல் இல்லாதவன். நீ இங்குவந்தால் இவனுடன் கூடிவிளையாடி இருக்கலாம். மேலும் அரவினைவென்று வெற்றிமாலைசூடும் மயிலும் உனக்கு உதவும். ஆகையால் அம்புலியே ! இவனுடன் விளையாடவா. ஆதிசேடனின் தலைநெளிக்கும் மயிலின் முதுகில்வரும் குமரனுடன் அம்புலியே ! விளையாடவா. ( 67 )

6. பண்டுபோல் இன்னமுதம் இன்னம் கடைந்திடப்
பழையமந் தரம் இல்லையோ
படர்கடல் குண்டகழி அளறாக வற்றிஇப்
பாரினில் திடரானதோ
விண்தலத்(து) அமரர்களும் அமரேச னும்சேர
வீடிநீ(டு) அந்தகாரம்
மேவிஎழு பகிரண்ட கூடம்வெளி ஆனதோ
விடம்ஒழுகு நெட்டெயிற்று
மண்டுவா சுகிதுண்டம் ஆனதோ இன்னம்ஒரு
வாலிக்கு வாலில்லையோ
மதியிலா மதியமே இவன்நினைத் தாலெந்த
வகைசெலா(து) ஆகையால்நீ
அண்டர்நா யகன்எங்கள் செந்திவடி வேலனுடன்

அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்நடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மந்தரம்= மந்தரமலை. படர்கடல்= விரிந்துள்ள கடல். அளறு= சேறு.. திடர்= மேடு. அமரேசன்= தேவேந்திரன். வீடி= இறந்து. இருள் நீடு அந்தகாரம்= கருமைமிக்க இருள். அண்டகூடம்= அண்டங்கள். நெட்டெயிற்று மண்டு= நீண்டபற்கள் மிக்க. துண்டம் ஆனதோ= துண்டாகி இறந்ததோ. மதியிலா மதியம்= அறிவில்லாத சந்திரனே. செலாது= நடக்காது. அருவரைகள்= மிகப்பெரிய மலைகள். நடவு= செலுத்தும்.

**பொழிப்புரை** : முன்புபோல் பாற்கடலில் இனியஅமுதம்கடைய முன்னைய மந்தரமலை இல்லையா ? விரிந்துள்ள மிகஆழமான பாற்கடல் சேறாகவற்றி இவ்வுலகில் அவ்விடம் மேடானதோ ? வானுலகத்தேவர்களும் தேவேந்திரனும் ஒருசேர இறந்து மிக்க இருள்மேவி ஏழு அண்டங்களும் வெளி ஆயினவோ ? விடமொழுகும் நீண்டபற்கள் மிக்கவாசுகிப் பாம்பு துண்டாகி இறந்ததோ ? உதவிய வாலிக்கு வால்இல்லையா ? இவன்நினைப்பின் எது நடக்காது ? ( நீவிளையாட வராவிடில் இவன் அனைத்தையும் கொண்டு பாற்கடல் கடைந்து புதியசந்திரனை உண்டாக்கிக்கொண்டு உன்னை ஒதுக்கி, அவனுடன் விளையாடுவான்.) எனவே அம்புலியே ! நீ அண்டங்களின் தலைவனாகிய இவனுடன் விளையாடவா. மிகப்பெரிய மலைகளும் கிடுகிடுக்க மயிலைச் செலுத்தும் முருகனுடன் அம்புலியே ! விளையாடவா. **( 68 )**

**7.** வட்டமா கத்துள்வெளி வடிவுகொள லால்என்றும்
மானைத்த ரித்திடுகையால்
மந்தா கினித்தரங் கத்துவளம் எய்தலால்
மன்னும் கணம் சூழ்தலால்
இட்டமொடு பேரிரவில் வீடுபெற லால் உலகில்
எவரும் துதித்திடுதலால்
இரவிகண் ணுறுதலால் இடபத்தில் ஏறலால்
ஏமமால் வரைஎய்தலால்
முட்டமறை வேள்விக்(கு) உரித்தாகை யால்வெய்ய
மூரிஅர வுக்(கு) உடைதலால்
முக்கண்உமை பங்கனார் ஒக்கும்நீ என்றுதிரு
முகமலர்ந்(து) உனைஅழைத்தால்
அட்டபோ கம்பெறுவை செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : இச்செய்யுள் சந்திரனுக்கும் சிவபிரானுக்கும் சிலேடையமைந்தது.

**சந்திரன் - குறிப்புரை:** வட்டம்= பரிவேடம். ஆகத்துள்= உடம்பினுள். வெளிவடிவு= வெள்ளியின் அழகு. மான்= மானுருவம்போன்ற களங்கம். மந்தாகினி= கங்கையாறு. தரங்கத்துவளம்= அலையின் வளமாகிய குளிர்ச்சி. கணம்= உடுக்கூட்டம். வீடு= மறைந்திருக்கும் நிலையில் இருந்து விடுதலை.. இரவி கண் உறுதலால்= ( ஒளிர்வதற்குச் )சூரியனின் பார்வைபெறுவதால். இடபத்து= இடபராசியில், ஏமமால்வரை= பொன்மலையாகிய மாமேருமலை. முட்ட= முழுதும். மூரி அரவு= பெரிய பாம்புக்கு. உடைதலால்= தளர்தலால்.

**சந்திரன் - பொழிப்புரை** : வட்டவடிவமான பரிவேடத்துள் வெள்ளியின் அழகு பெறுவதால், மானுருவம் போன்ற களங்கம் பெற்றிருப்பதால், கங்கைப் பேராற்றின் வளமான குளிர்ச்சியைப் பெற்றிருப்பதால், நிலையாக உடுக்கூட்டம் உன்னைச் சூழ்ந்திருப்பதால், மறைந்திருக்கும் நிலையிலிருந்து விருப்புடன் விடுபட்டு இரவுநேரத்தில் ஒளிர்வதால், உலகில் எல்லாரும் வணங்குவதால், ( ஒளிர்வதற்குச் ) சூரியனின் பார்வை பெறுவதால், இடபராசியில் பொருந்துவதால், பொன்மலையாகிய மேருமலையைச் சென்றடைவதால், முழுவதும் வேத வேள்விக்கு உரியவனாதலால், கொடிய பெரிய பாம்புக்கு நீ உன் உடல்தளர்தலால் .......

**சிவபெருமான் - குறிப்புரை** : வட்டமாகம்= வட்டவடிவமான ஆகாயம். உள்= (உயர்வாகக்)கருதப் பெறும். வெளிவடிவு= சிதாகாசவடிவம். தரித்திடு கையால்= கையால் தாங்குதலால். வளம்= அழகு. கணம்= சிவகணம். பேர் இரவில்= பெரிதும் யாசிப்பதில். வீறு= பிட்சாடனராகிய பெருமை. இரவிகண் உறுதலால்= சூரியனை (வலக்)கண்ணாகப் பெற்றிருப்பதால். இடபம்= விடையூர்தி. ஏமமால்வரை= பெரிய பொன்மலை. முட்ட= முழுமையாக. அரவு குடைதலால்= ( தாருகாவன முனிவர்கள் ஏவிய ) பாம்புகளை வருத்தியதால்

**சிவபெருமான் - பொழிப்புரை** : வட்டவடிவமான ஆகாயத்தில் உயர்வாகக் கருதப்பெரும் சிதாகாசவடிவு கொள்வதால், எந்நாளும் மான் ஒன்றினைக் கையில் தாங்குதலால், கங்கைப் பேராற்றின் அலைகளால் அழகு பெறுவதால், பெருமைபொருந்திய சிவகணம் சூழ்ந்திருப்பதால், பிட்சாடனராக விருப்புடன் பெரிதும் யாசிப்பதில் பெருமை பெறுவதால், உலகில் எல்லாரும் வணங்குவதால், சூரியனை வலது கண்ணாகப் பெற்றிருப்பதால், விடையூர்தியில் ஏறுவதால், பொன்மலையாகிய கயிலையில் இருப்பதால், முழுமையாக வேதவேள்விக்கு உரிமையுடைமையால், தாருகவனத்து முனிவர்கள் ஏவிய கொடிய பெரிய பாம்பினைத் தளர்வுறச் செய்தலால் .......

**முடிப்பு** : இக்காரணங்களால் சந்திரனே ! நீ உமையவளை இடப்பாகம்பெற்ற சிவபெருமானுக்கு ஒப்பாவாய் என்றுகருதி முகம் மலர்ந்து உன்னை இவனுடன் விளையாட அழைக்க நீவந்தால் பொன்முதலிய எண்வகைப்பேறுகளையும் பெறுவை. எனவே செந்தில்வடிவேலனுடன் அம்புலீ விளையாடவா. பெரியமலைகளும்கிடுகிடுக்க மயிலினைச் செலுத்திவரும் முருகனுடன் அம்புலியே ! விளையாட வா. ( **69** )

8. காதலால் எறிதிரைக் கடல்மகளிர் சிறுமகார்
கரையில் குவித்தமுத்தும்
கருவாய் வலம்புரி உமிழ்ந்தமணி முத்தும்முள்
கண்டல்மடல் விண்டசுண்ணத்
தா(து)அலால் இளவாடை கொடுவரும் கானல்வெண்
சங்குநொந்(து) ஈற்றுளைந்து
தனியே உகுத்தபரு முத்தமும் தன்னிலே
சதகோடி நில(வு)எறிக்கும்
ஈ(து)அலால் ஒருசிறிதும் இர(வு)இல்லை எவருக்கும்
இர(வு)இல்லை நீயும்இங்கே
ஏகினால் உன(து)உடல் கறைதுடைத் திடுதலாம்
என்பதற்(கு) ஐயம்இல்லை
ஆதலால் நீதிபுனை செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : எறிதிரைக் கடல்மகளிர் சிறுமகார் கரையில் காதலால் தொகுத்த முத்து. மகார்= பிள்ளைகள். கருவாய்= கருக்கொண்டு. கண்டல்= தாழை. மடல் விண்ட= மடல்விரிந்த. சுண்ணத்தாது= வெண்மையான மகரந்தத் தூள். கானல்= கடற்கரைச்சோலை. தன்னிலே= இந்த முருகன் திருமுன்பு. சதகோடி= நூறுகோடி. நிலவு எறிக்கும்= நிலாஒளி வீசும். இரவு= இருட்டு - களங்கம். இரவு= யாசித்தல். புனை= பொலிவு.

**பொழிப்புரை** : அலைஎறியும் கடற்கரை மகளிரின் பிள்ளைகள் ஆசைகாரணமாகத் தொகுத்துவைத்த முத்தும், கருவாய்ப்பட்ட வலம்புரிச்சங்குகள் ஈன்ற முத்தும், முட்களுடைய தாழைமடல் விரிந்ததால் அதன் வெண்மையான மகரந்தத்தூளின் மணத்தை இளவாடைக்காற்று கொண்டுவரும் கடற்கரைச் சோலையில் வெண்மையான சங்குகள் முதிர்கருவால் நொந்து தனியே ஈன்ற பருத்த முத்தமும் இம்முருகன் திருமுன் நூறுகோடி நிலவின் ஒளிவீசும். இதைத்தவிர இங்கு ஒருசிறிதும் இருட்டு - களங்கம் இல்லை. எவரும் எவரிடமும் யாசித்தலும் இல்லை. நீயும் இங்கேவந்தால் போதும். யாரிடமும் யாசிக்காமலேயே உன்னுடல் களங்கத்தை - இருளைத் துடைத்துக் கொள்ளலாம் என்பதற்கு ஐயமில்லை. எனவே நீதிப்பொலிவே கொண்ட செந்தில்

வடிவேலனுடன் அம்புலியே ! விளையாடவா. பெரிய மலைகளும் கிடுகிடுக்க மயிலைச் செலுத்திவரும் முருகனுடன் அம்புலியே ! விளையாடவா. **(70)**

9. கடியவளி எறியும் தழைச்சிறைக் கூருகிர்க்
கருடவா கனனும்இகல்கூர்
கட்டைமுள் அரைநாள நெட்டிதழ் உடுத்தபொன்
கமலயோ னியும்எழுந்து
கொடியவெங் கொலைபுரி வராகமென ஒருவன்எழு
குவலயம் இடந்துதேடக்
குறித்தொருவன் எகினமாய் அண்டபகி ரண்டமும்
கொழுதிக் குடைந்துதேட
முடியஇது காறும்அவர் அறிவுறா வகைநின்ற
முழுமுதல் கடவுள்அடியும்
முடியுநீ கண்டனை எனக்கருதி இன்றுதிரு
முகம்மலர்ந்(து) உனைஅழைத்தால்
அடியவரை வாழ்வித்த செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : கடியவளி= வேகமான காற்று. தழை சிறை= செழித்த சிறகு. உகிர்= நகம். கருடவாகனன்= திருமால்.கட்டைமுள்= மொத்தமானமுள். அரை நாளம்= தண்டில் துளை. கமல யோனி= உந்திதாமரையில் பிறந்த நான்முகன் எழுந்து= புறப்பட்டு. வராகம்= பன்றி. ஏழு குவலயம்= ஏழுலகம். இடந்து= தோண்டி. குறித்தொருவன்= முன்குறித்த நான்முகன். எகினம்= அன்னப்பறவை. கொழுதிக் குடைந்து= கிண்டிக் கிளைத்து. இதுகாறும் முடிய= இதுவரை. முழுமுதற்கடவுள்= முழுமுதற்பொருளான சிவபிரான். அடியும்= சரணடைந்தபோது திருவடியையும். முடியும்= சிவபிரான் தன்தலையில் சூடிக்கொண்டதால் திருமுடியையும்.

**பொழிப்புரை** : வேகமான காற்றினை எறியும் செழித்த சிறகினையும், கூர்மையான நகத்தையும் கொண்ட கருடவாகனனாகிய திருமாலும், மிகக்கட்டையான முள்ளுடன் தண்டில் துளையும்பெற்ற நீண்டஇதழுடைய (திருமாலின்) உந்தித்தாமரையில் பிறந்த நான்முகனும் புறப்பட்டு, முறையே மிகக்கொடிய கொலைபுரியும் பன்றியாக ஒருவன் ( திருமால் ) ஏழுஉலகங்களையும் தோண்டித்தேட, முன்குறித்தமற்றொருவன் ( நான்முகன் )அன்னப்பறவையாக அண்டபகிரண்டங்களை எல்லாம் கிண்டிக் கிளைத்துத் தேட, இதுவரை அவர்கள்காணாத முழுமுதற் கடவுளாகிய சிவபிரானின் திருவடியை நீ உன்கலையினைக் காக்கச் சரணடைந்தபோதும், திருமுடியை அவன் உன்னைச் சூடிக்கொண்டதாலும் கண்டவன் என்பதால், விரும்பி முகம்மலர்ந்து அவனுடன் விளையாட உன்னைஅழைத்தால், அடியவரை வாழ்வித்துவரும் செந்திவடிவேலனுடன் அம்புலியே ! விளையாட வா. பெரியமலைகளும் கிடுகிடுக்க மயிலினைச் செலுத்திவரும் முருகனுடன் அம்புலியே ! விளையாட வா. ( **71** )

10. பெரியமா கத்துள்நீ வருவைஇவன் வஞ்சகம்
பேசும்ஆ கத்துள்வாரான்
பெருகநீர் வேலையில் புகுவாய் இவன்பார்
பிளக்கவோ வேலைவிட்டான்
உரியமா குணவாயில் உறுவைநீ இவன்அன்(பு)
உறாதகுண வரையேஉறான்
உடலிலே முழுமறு உனக்(கு)உண்(டு) இவன்தனக்(கு)
ஒருமறுவும் இல்லைமீளக்
கரியமா முகிலிலே மறைவைநீ இவன்நெடும்
கரியமாமுகிலின் மறையான்
கருதிநீ இவையெலாம் உணர்இவன் பெருமையைக்

கண்டும்நீ அங்(கு)இராதே
அரியமா தவன்எங்கள் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்நடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மாகம்= ஆகாயம். ஆகம்= உடம்பு - இதயம். வேலை= கடல். வேலை= வேலினை. குணவரை= கிழக்கில் உள்ளமலை. உறுவை= தோன்றுவாய். குணவரை= குணமாகிய மலை. முழுமறு= முழுமையான களங்கம். ஒருமறுவும்= ஒரேஒரு களங்கமும். கரிய மாமுகில்= கரிய பெரிய மேகம். நெடும் கரியமாமுகில்= (வருணன் ஏவிய)கரிய பெரிய ஏழ்மேகங்கள்.

**பொழிப்புரை** : நிலவே ! நீ மிகப்பெரிய ஆகாயத்தில் வருவாய். இவன் வஞ்சகம் பேசுவோர் இதயத்தில் வரமாட்டான். நீ நீர்பெருகிய கடலில் புகுந்து மறைவாய். இவன்பூமியைப் பிளக்குமாறு கடலில் வேலினை விடமாட்டான் ( கடல் சுவற் வேல்விட்டபடலம் ). நீ உனக்குரிய கிழக்குமலையில் தோன்றுவாய் - உதிப்பாய். இவன் அன்பில்லாத குணமலையில் தோன்றமாட்டான். உன்உடல்முழுதும் மறு - களங்கம் உண்டு. இவனிடம் எம்மறுவும் இல்லை. நீ கரிய பெரியமேகத்தில் மறைவாய். இவனை( திருவிளையாடற் புராணதில் ) வருணன் ஏவிய ஏழ்மேகங்களும் மறைக்கமாட்டா. நிலவே நீ இவைகளை எல்லாம் உணரின் இவன்பெருமையைக் கண்டு அங்கு இருக்காதே. மிகப்பெரிய தவத்தவன் ஆகிய எங்கள் செந்தில் வடிவேலனுடன் அம்புலியே ! விளையாட வா. பெரிய மலைகளும் கிடுகிடுக்க மயிலினைச் செலுத்தும் முருகனுடன் அம்புலியே ! விளையாட வா. ( **72** )

**11.** பரியநிழல் தன்னைச் சுளித்துஎயி லொடுபொருது
பாதசங் கிலியைநூறிப்
பாரிசா தத்தருவை இடுகுள(கு) எனக்கவுள்
பகுவாய்பு கக்குதட்டித்
தரியலர் நகர்ப்புறத்(து) எயில்இடு கபாடம்
தனைத்தூள் படுத்திஅவர்பொன்
தருணமணி முடிஇடறி முறைமுறை அழைக்கும்
தழைச்செவிப் பிறைமறுப்புச்
சொரிமத தாரைக் குறுங்கண் பெருங்கொலைத்
துடியடிப் புகர்ஒருத்தல்
துங்கவேள் இவனுடைய முன்றில் புறத்தில்
துளைகரம் நிமிர்த்துநிற்கும்
அரியகரு நாகம்என வெருவல்கொல் இவனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்நடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : பரிய= பருத்த. சுளித்து= சினந்து. எயில்= கோட்டைமதில். பொருது= மோதி. நூறி= ஒடித்து. இடு குளகு= தனக்கிட்ட தழையுணவு. குதட்டி= நைய மென்று. தரியலை= பகைவர். எயில் இடு கபாடம்= மதிலில் இட்ட பெருங்கதவு. பொன்தருண மணி முடி= பொன்னாலான புதிய மணிகள் பதித்த முடி, இடறி= மிதித்து. முறை முறை= வரிசை வரிசையாக. அழைக்கும்= (காற்றை) வரவழைக்கும். தழை= இலைபோல். அகன்ற துடிஅடி= உடுக்குப் போல்அடி அகலமான. புகர் ஒருத்தல்= முகத்தில் புள்ளிகளுடைய யானை. முன்றில் புறத்து= வாயிலுக்கு வெளியே. வெருவல் கொல்= அஞ்சுகிறாயோ ?அஞ்சவேண்டா.

**பொழிப்புரை** : பெரிய தன்நிழலைச் சினந்தும், கோட்டைமதிலுடன் பொருதும், கால்களில் கட்டிய சங்கிலியை ஒடித்தும், பாரிசாதமரத்தின் தழைகளைத் தனக்கு இட்ட உணவாகக் கருதி தனதுபிளந்த வாயிலிட்டு நையமென்றும், பகைவர்தம் நகர்க்கு வெளியே கோட்டைச்சுவரில் இட்ட பெரிய கதவினைத் தூளாக்கியும், பகைவரின் பொன்னால் ஆனதும் மணிகள் பதித்ததுமாகிய புதிய கிரீடத்தை மிதித்தும். வரிசைவரிசையாகக் காற்றைவரவழைக்கும் இலைபோன்ற காதுகளும். மூன்றாம் பிறைபோல் கூர்மையுடன் வளைந்த கொம்புகளுடன், மததாரைசொறிந்து, உடுக்கை

போல் அடியகன்ற கால்களுடன், முகத்தில் புள்ளிகளும் உடைய யானை, இவனுடைய வாயில்முன்னே தனது துளைக்கையை நிமிர்த்தி வானில் நீட்டியதைக் கரியபெரிய பாம்புஎன்று அஞ்சாமல் வந்து இவனுடன் அம்புலியே விளையாட வா. பெரிய மலைகள் கிடுகிடுக்க மயிலினைச் செலுத்தும் முருகனுடன் அம்புலியே ! விளையாட வா. **( 73 )**

## 8. **சிறுபறைப்பருவம்.**

சிறிய தோற்கருவியை முழக்கி விளையாடும் பருவம்

*********

பொருவாகை சூடும்அர வக்கொடிக் குருகுலப்
பூபாலர் ஏறும்அந்தப்
பூபால னுக்(கு)இளைய துணைவர்நூற் றுவரும்பொ
ருபதினெட்(டு) அக்ரோணி
ஒருவாய்மை சொற்றபடை வீரும் செருவினில்
உருத்(து)எழலும் நீதிஐவர்
உடனாக நின்றுபற் குனன்மணித் தேரினுக்(கு)
உள்ளசா ரதியாகிஅம்
மருவார்கள் தானையில் பட்டவர்த் தனன்மகுட
வர்த்தனர் அடங்கலும்போய்
மயங்கிஒரு நாள்விசய னுக்குவிசை யம்பெருக
மண்ஏழும் உண்(டு)உமிழ்ந்த
திருவாய் வலம்புரி முழக்குதிரு மால்மருக
சிறுபறை முழக்கிஅருளே
செருவில்எதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கிஅருளே.

**குறிப்புரை :** பொருவாகை= போரில் வெற்றி. பூபாலர்= அரசர்கள். அந்தப் பூபாலன்= துரியோதனன். துணைவர்= தம்பியர். அக்குரோணி= ஒருபேரெண்ணிக்கை. வாய்மை= வலிமை. நீதி ஐவர்= நீதிப்படி நின்றபாண்டவர். பற்குனன்= அருச்சுனன். மருவார்கள்= பகைவர்கள் - கௌரவர். . பட்டவர்த்தனர்= பட்டம் தரித்தற்குரியவர். மகுடவர்த்தனர்= கிரீடம்தரித்தற்குரியவர். மயங்க= கலங்க. விசையம்= வெற்றி. முழக்கும்= ஊதும். பரநிருதர்= அந்நியர்ஆகிய அசுரர் கலகன்= கெடுப்பவன்.

**பொழிப்புரை :** போரில் வெற்றிசூடும் பாம்பு இலச்சினையுடைய குருகுல அரசர்களும், அவர்களுக்குத் தலைவனாகிய துரியோதனனும், அவன் தம்பியராகிய துணைவர் நூறுபேர்களும், போரிடும் வலிமைபொருந்திய பதினெட்டு அக்குரோணிப் படைவீரர்களும் சினம்மிகுந்து எழ, நீதிப்படிநின்ற பாண்டவருடன் நின்று, அருச்சுனனின் அழகிய தேருக்குஉரிய சாரதிஆகி, பகைவராகிய கௌரவர்படையில் பட்டம்தரித்தற்குரியவர், கிரீடம் சூடுதற்குரியவர் முதலிய அனைவரும் மனம்கலங்க, ஒருநாள் விசையனுக்கு வெற்றிபெருக ஏழ்உலகத்தையும் உண்டுஉமிழ்ந்த திருவாயால் தனது வலம்புரிச்சங்கினை முழக்கிய திருமால்மருகனே ! சிறுபறை முழக்கியருள்க. எதிர்நின்று போரிட்ட பகைவராகிய அசுரர்குலத்துக்குக் கேடுசெய்பவனே ! சிறுபறை முழக்கியருள்க. **( 74 )**

**2.**

முருந்(து)ஆரும் மணிமுறுவல் நெய்தல்நில மகளிரின்
முகிழ்முலை தனக்(கு)உடைந்து
முளரிமுகை நீரில் குளித்துநின்(று) ஒருதாளின்
முற்றியத வம்புரியவெங்
கருந்தாரை நெட்டிலைப் பொருவேல் எனப்பொரும்
கண்கடைக்(கு) உள்ளுடைந்து
காவிமலர் பங்கப் படக்கருங் குழல்கண்டு
கரியமுகில் உடல்வெளுத்துப்
பொருந்தாமல் ஓடிஅந் தாரசாரி யாய்ஒரு

பொருப்(பு)ஏற வளமையேறும்
புகழ்ஏற வாழும் திருச்செந்தி லாய்உனது
பொற்றாள் வணக்கமுற்றுத்
திருந்தார்கள் நெஞ்சம் பெரும்பறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
செருவில்எதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : முருந்து= மயிலிறகின் வெண்மையான அடிமுள். உடைந்து= தோற்று. முளரிமுகை= தாமரைமொட்டு. ஒருதாள்= ஒற்றைத்தண்டு. முற்றிய= கடுமையான. வெம்கடும்தாரை= கொடிய பெரிய கூர்மையான. நெட்டிலை= நீண்ட இலை. புகர்வேல்= ஒளியுடைய வேல். கண்கடை= கடைக்கண். காவிமலர்= நீலோற்பலமலர். பங்கம் பட= சேற்றில் கிடக்க. பொருந்தாமல்= ஒப்பாகாமல். அந்தரசாரி= வானில் உலாவுவது.

**பொழிப்புரை** : மயிலிறகின் வெண்மையான அடிமுள் போன்ற பற்களால் முறுவல் பூக்கும் நெய்தல்நில மகளிரின் தாமரைமொட்டுப் போன்ற முலைகளுக்குத் தோற்றுத் தாமரை மொட்டுகள் நீரில்குளித்துத் தமது தண்டாகிய ஒற்றைத்தாளில் நின்று கடுந்தவம் செய்யவும்; கொடிய பெரிய கூர்மையான நீண்ட இலைவடிவானதும் ஒளியுடையதுமாகிய வேல்போல் விளங்கும் கடைக்கண்ணுக்குத் தோற்று நீலோற்பலமலர் சேற்றில் கிடக்க; கருமையான கூந்தலைக்கண்டு கார்மேகம் ஒப்பாகாமல் தொற்று வெளுத்து வானில் உலாவ ஒருமலைமேல் ஏற; வளம்பொருந்திய புகழ்ஏற வாழும் திருச்செந்தூருடையவனே ! உனது அழகிய தாளில்வணங்கித் திருந்தாதார் நெஞ்சு பறைபோல் முழங்க நீ சிறுபறை முழக்கியருள்க. எதிர்நின்று போரிட்ட பகைவராகிய அசுரர்குலத்தைக் கெடுத்தவனே ! சிறுபறை முழக்கியருள்க. ( 75 )

3. கங்கைஅணி செஞ்சடையில் வைத்தகுழ விப்பிறைக்
கடவுள்ஆ லயமனைத்தும்
கங்குல் கருங்கடல் கழிந்தவை கறையில்
கலித்தவால் வளைமுழங்கும்
பங்கய மலர்ப்பொகுட்(டு) இதழ்வாய் துளிக்கும்
பசுந்தேறல் உண்டுமெள்ளப்
பலகோடி சஞ்சரீ கப்படலை பெடையொடு
படிந்துபல கால்முழக்கும்
வெங்கயம் முடக்கும் புழைக்கரம் நிமிர்த்துவெளி
மேகநீ ரைக்குடித்து
வீதிவாய் நின்றுபிளி றித்தினம்மு ழக்கும்வெறி
வெண்திரைக் குண்டகழியில்
செங்கயல் முழங்கும் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவில்எதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : பிறைக்கடவுள் ஆலயம்= சிவபெருமான் திருக்கோயில்கள்.. கங்குல் கருங்கடல்= கரிய இரவாகியகடல். கலித்த= மணிகளும் திருமுறைகளும் ஒலித்தன. வளை முழக்கு= சங்குகளின் முழக்கம். பசுந்தேறல்= புதுத்தேன். சஞ்சரீகப்படலை= வண்டுகளின் கூட்டம். பல்கால்= பலமுறை. வெங்கயம்= சினம்மிக்க யானை. முடக்கும்= முடக்கிவைத்திருந்த. வெளி= வானம். குண்டகழி= வட்டவடிவமான ஆழமானகிடங்கு.

**பொழிப்புரை** : கங்கைதரித்த சடையில் மூன்றாம்பிறை சூடிய சிவபிரான் திருக்கோயில் அனைத்திலும் கரிய இரவுஆகியகடல் கழிந்த விடியற்காலையில் மணிகளும் திருமுறைகளும் காலையில் ஒலிக்கும் சங்குகளும் முழங்கின. தாமரைமலரிலுள்ள பொகுட்டிலும் இதழ்களிலும் துளிக்கும் புதுத்தேனை மெள்ளஉண்டு பலகோடி வண்டுகள் பெடையொடு மலர்களில் படிந்து பலமுறை முழங்கும். சினம்மிக்க யானை தனது முடக்கிய துளைக்கை நீட்டி வானவெளியிலுள்ள மேகமேகத்தின் நீரைப்பருகி விதியில் நின்று தினமும் பிளிறி முழங்கும். வெண்மையான அலைகள்

மோதும் வட்டவடிவமான்ன ஆழக்கிடங்கில் செங்கயல் முழங்கும். இத்தகு திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள வேலனே ! சிறுபறை முழக்கியருள்க. போரில் எதிர்நின்று போரிட்ட பகைவராகிய அசுரர்குலத்தைக் கெடுத்தவனே ! சிறுபறை முழக்கியருள்க. . ( 76 )

4. காவான பாரிசா தத்தரு குலநிழல்
கடவுள்தெரு வீதிதோறும்
கடிமணப் புதுமங் கலத்தொனி முழக்கமுகை
கட்டவிழ்த்(து) இதழ்உடைக்கும்
பூவார் இலைத்தொடையல் அளகாபு ரேசன்
புரந்தொறும் குளிறுமுரசம்
பொம்மென முழக்கமன் மதனுடைய பல்லியம்
பொங்குதெண் டிரைமுழக்கப்
பாவாணர் மங்கலக் கவிவாழி பாடிப்
பரிந்துதிண் டிமம்முழக்கப்
பரவரிய திருவிழா என்றுபல பல்லியம்
பட்டினம் தொறுமுழக்கத்
தேவாதி தேவர்உயர் சதுமறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : பாரிசாதம்= பவளமல்லிகை. குலம்= கூட்டம். கடவுள்= இந்திரன். கடிமணம்= திருமணம். பூவார் இலை= மலர் இதழ். அளகாபுரேசன்= குபேரன். புரம்= கோயில். குளிறு முரசம்= ஒலிக்கும் முரசு. பொம்மென= விரைந்து. பல்லியம்= பலவகை இசைக்கருவிகள். திரை= அலைபோல். தேவாதி தேவர்= தேவர்களும் தேவர் தலைவர்களும்

**பொழிப்புரை** : சோலையாக விளங்கும் பவளமல்லிகை நிழலில் வாழும் தேவேந்திரனின் தெருவில் அமைந்த வீதிகளில் திருமணப் புதுமங்கலஒலி முழங்க; மொட்டுமலர்ந்து இதழ்விரிந்த பூவிதழ்களாலான மாலையுடைய குபேரனின் இடந்தோறும் ஒலிக்கும் முரசம் விரைந்துமுழங்க; மன்மதனுடைய பலவகை இசைக்கருவிகள் பொங்கிவரும் அலைபோல் முழங்க; பாவாணர்கள் மங்கலக்கவிபாடிப் பரிவுடன் திண்டிமம் என்ற இசைக்கருவி முழக்க; போற்றுதற்கரிய பெருந்திருவிழா என்று இசைகருவிகள்பல நகரந்தோறும் முழங்க; தேவர்களும் தேவர்தலைவர்களும் சிறந்த மறையினை முழங்க நீ சிறுபறை முழக்கியருள்க. போரில் எதிர்நின்று போரிட்ட பகைவராகிய அசுரர்குலத்தை கெடுத்தவனே ! சிறுபறை முழக்கியருள்க. ( 77 )

5. வரைவாய் முழக்கும்கடாயானை வெங்கூன்
மருப்பில்விளை முத்தும்இளவேய்
மணிமுத்தும் அடுபாலை வனசுரத்தில் கரு
வராகத்தின் முத்தும்அண்டர்
உரைவாய் முழக்கும் பெரும்புறவில் உந்திநத்(து)
உமிழும்மணி முத்தும்மள்ளர்
ஒலியறா மருதவே லிச்செந்நெல் கன்னல்தரு
ஒளிமுத்தும் ஓங்குநெய்தல்
கரைவாய் முழக்கும்முள் கூன்வெண் பணிலம்
கடுஞ்சூல் உளைந்துகான்ற
கதிர்முத்தும் ஒக்கக்கொ ழித்துவரு பொருநைஆய்
கழிதொறும் கயல்குதிக்கத்
திரைவாய் முழக்கும் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை :** வரைவாய் = மலையில். கடாயானை= ஆண்யானை - களிறு. வெங்கூன்= விரும்பத்தக்க வளைந்த. இளவேய்= மென்மையான மூங்கில். அடு= கொதிக்கும். வராகம்= காட்டுப் பன்றி. அண்டர்= இடையர். புறவு= முல்லைநிலம். மணி= சிறந்த. மள்ளர்= உழவர். வெண்பணிலம்= வெண்சங்கு. கான்ற= ஈன்ற. ஒக்க=ஒருசேர. பொருனைஆய்= தாமிரவருணிஆறாகிய தாய்.

**பொழிப்புரை :** மலையில் முழங்கும் களிற்றியானையின் விரும்பத்தக்க வளைந்த தந்தத்தில் விளைந்த முத்தும், மென்மையான மூங்கிலின் அழகிய முத்தும், கொதிக்கும் பாலைநிலத்தில் வாழும்கரிய காட்டுப்பன்றியின் முத்தும், இடையர்களின் ஆரவாரம் உடைய பெரிய முல்லைநிலத்தில் காட்டாறு கொண்டுவரும் முத்தும், உழவர் ஆரவாரம் மிக்க மருதநிலத்தின் வேலியாக விளங்கும் செந்நெல் கரும்பு ஆகியனதந்த ஒளிபொருந்திய முத்தும், நெய்தல் நிலத்தின் கரையில் முழங்கும் முள்ளுடைய வளைந்தவெண்சங்கு கடுமையான சூலால் வருந்திஈன்ற கதிர் முத்தும் ஆகியவற்றை ஒருசேரத் தாமிரவருணியாகிய தாய் ஒதுக்கிக் கொண்டுவந்துதரும் கழிகளில், கெண்டைமீன்கள் தாவிக்குதிக்க எழும் அலையின்முழக்கமும் உடைய திருச்செந்தில் வேலனே ! சிறுபறைமுழக்கியருள்க. போரில் எதிர்நின்று போரிட்ட பகைவராகிய அசுரர்களின் குலத்தைக் கெடுத்தவனே ! சிறுபறை முழக்கியருள்க. **( 78 )**

6. முனைவாளை வடிவேலை வடுவைவெங் கடுவைஇதழ்
முளரியைப் பிணையைமதவேள்
மோகவா ளியைஅடு சகோரத்தை வென்றுகுழை
முட்டிமீ ளும்கண்மடவார்
நினைவாளை வாள்முறுவ லாடிஇள முலையானை
நேர்நேர் நிறுத்திநெய்தல்
நீடும்அள காடவி வனத்தில் பிணித்துவெண்
நித்தில வடம்தெரிந்து
புனைவாளை நாள்முடி விளம்பிநடு வாளைமென்
போதில்உறை வாளைஒப்பப்
பொலிவாளை நின்றுகளை களைவாளை நாடிவிளை
போங்கழி கடந்துமெள்ளச்
சினைவாளை பாயும் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை :** முனை= கூர்மை. வடு= பிளந்தமாவடு. வெங்கடு= கொடிய நஞ்சு. முளரி இதழ்= தாமரை மலரிதழ். பிணை= மான். மதவேள் மோகவாளியை= மன்மதனின் மோகமூட்டும் அம்பினை. சகோரம்= சகோரப்பறவை. நினைவு ஆளை= நினைக்கும் மனிதரை. வாள்முறுவலாடி= ஒளிரும் புன்னகை பூத்து. இளமுலை யானை= இளமையான முலையாகிய யானை. நெய்தல்நீடும்= நெய்தற்பூ மிக்க. அளகாடவி= கூந்தலாகிய காடு. வனம்= அழகு. வடம்= மாலை. நாள்= நல்லநாளில். முடி= நாற்றுமுடியை. விளம்பி= தெய்வவணக்கம்கூறி. மென்போதில் உறைவாள்= மென்மையான தாமரைமலரில் வாழும் திருமகள். களை களைவாள்= களையெடுப்பவள். விளை போம்கழி= உப்பு விளையும் நீண்ட உப்பங்கழி நிலம்.

**பொழிப்புரை :** கூர்மையான வாள், கூர்மையாக வடிக்கப்பெற்ற வேல், கொடிய நஞ்சு, தாமரைமலரிதழ், மான், மன்மதனின் மோகமூட்டி வெல்லும் அம்புகள், சகோரப்பறவை ஆகியவற்றை வென்று; காதணியை மோதிமீளும் கண்களுடைய மகளிரை நினைக்கும் மனிதரை ஒளிரும் புன்னகை பூத்து, தமது முலைகளாகிய யானைகளின் நேருக்குநேர் நிறுத்தி நெய்தல்மலர் மிகச்சூடிய கூந்தற் காட்டால் அழகாகக் கட்டி, வெண்மையான முத்துமாலையை ஆய்ந்து அணிபவளை, நல்லநாளில் நாற்றுமுடியைத் தெய்வவணக்கம் கூறி நடுபவளை, மென்மையான தாமரை மலரில் வாழும் திருமகளை ஒத்துப் பொலிகிறவளை, கழனியில் நின்று களைகளைக் களைகிறவளை எண்ணி, உப்புவிளையும் நீண்ட உப்பங்கழி நிலத்தினைகடந்து மெள்ளப்போய்ச் சினைவாளை பாயும் திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள வேலனே ! சிறுபறை முழக்கியருள்க.

போரில் எதிர்நின்று போரிட்ட பகைவராகிய அசுரர் குலத்தைக் கெடுத்தவனே சிறுபறை முழக்கியருள்க. **( 79 )**

**7.** அறந்தரு புரந்தரா தியர்உலகில் அரமகளிர்
ஆடுமணி ஊசல்சிற்றில்
அம்மனை கழங்குபல செறியும் தடஞ்சாரல்
அருவிபாய் பரங்கிரியும்முள்
புறந்தரு புனிற்றுவெள் வளைகடல் திரைதொறும்
பொருதசீ ரலைவாயும்மென்
போதுகமழ் திருவாவி னன்குடியும் அரியமறை
புகலும்ஏ ரகமும்இனிமைக்
குறம்தரு கொடிச்சியர் பெருங்குரவை முறைகுலவு
குன்றுதோ றாடலும்தண்
கொண்மூ முழங்குவது கண்(டு)இனம் எனக்கரட
குஞ்சரம் பிளிறும்அரவம்
சிறந்தபழ முதிர்சோலை மலையும் புரந்தநீ
சிறுபறை முழக்கியருளே
செருவில்எதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : அறம்தரு= பசுபுண்ணியம் செய்த. புரந்தராதியர்= தேவேந்திரன் முதலியவர். அரமகளிர்= தேவமகளிர். செறியும்= மிக்க. பரங்கிரி= திருப்பரங்குன்றம். முள்புறம்தரு= வெளியில் முள்பெற்ற. வெள்வளை= வெண்சங்கு. பொருத= மோதிய. போது= மலர். குறம்தரு= குறிகூறும். கொடிச்சியர்= குறத்தியர். கொண்மூ= கார்மேகம். கரட குஞ்சரம்= மதமுடைய யானை.

**பொழிப்புரை** : பசுபுண்ணியம் செய்த தேவேந்திரன் முதலியவர்களின் உலகில் வாழ் தேவமகளிர் ஆடும் அழகிய ஊஞ்சல், சிற்றில், அம்மானை. கழங்கு என்று பலவாறாகச் செறிந்த பெரிய சாரலில் அருவிபாயும் திருப்பரங்குன்றமும்; வெளியே முட்களுடைய ஈன்றணிமை வாய்ந்த சங்குகள் கடல்அலை வீசும்தோறும் கரையில் மோதும் திருச்செந்தூரும்; மலர்களின் மென்மையான மணம் கமழும் திருவாவினன்குடியும்; சிறந்த மறைகள்போற்றும் திருஏரகமும்; இனியகுறிகூறும் குறத்தியர் இடும்பெரிய குரவையொலி விளங்கும் குன்றுதோறாடலும்; தண்ணிய கார்மேகம் முழங்குவதைக் கேட்டு அதுதன் இனத்தின் குரல்என்று மதமுடைய யானை பிளிறும் ஒலிசிறந்த பழமுதிர்சோலையும் காத்தருளும் நீ சிறுபறை முழக்கியருள்க. போரில்எதிர்நின்று போரிட்டபகைவராகிய அசுரர்குலத்தைக் கெடுத்தவனே ! சிறுபறை முழக்கியருள்க. **( 80 )**

**8.** எழும்இரவி மட்கஒளி தருமணி அழுத்துமுடி
இமையவர் மகிழ்ச்சிபெறவே
இருகுழை பிடித்தவிழி அரமகளிர் சுற்றிநடம்
இதுவென நடித்துவரவே
வழுவறு தமிழ்ப்பனுவல் முறைமுறை உரைத்துவெகு
வரகவிஞர் உட்குழையவே
மகபதியும் மிக்கமுனி வர்ர்கணமும் இச்சையுடன்
வழியடிமை செப்பியிடவே
பொழுதுதொறும் ஒக்கவிதி முறையுனை அருச்சனைசெய்
புனிதசிவ விப்ரருடனே
புகலரிய பத்தசனம் அரகர எனக்குலவு
புரவலர் விருப்பமுறவே
செழுமறை முழக்கவரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளும்மணி முத்தைஅலை எறியும்நக ருக்கதிப

சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : எழும் இரவி= மேலெழும் ஞாயிறு. மட்க= ஒளிமழுங்க. பிடித்த= தொட்ட. வழுவறு= குற்றமற்ற. உட்குழைய= மனம் குழைய. சிவவிப்ரர்= சிவ அந்தணர். புரவலர்= அரசர்.

**பொழிப்புரை** : மேலெழும்காலை ஞாயிற்றின் ஒளிமழுங்குமாறு ஒளிவீசும் மணிகள் பதித்த முடியணிந்த தேவர்கள் மகிழ, இருகாதுகளையும் தொட்ட விழிகளுடைய தேவமகளிர் சுற்றிவந்து எமது நடனம் இதுவென்று நடித்துவர, வரகவிஞர்கள் குற்றமற்ற தமிழ்ப்பாடல்களை முறையான இசையுடன் பாடி மனம்குழைய, இந்திரனும் மிக்க முனிவர்கூட்டமும் விருப்புடன் நாங்கள்வழிவழி உன்அடிமை என்று கூற, பொழுதுதொறும் தவறாமல் விதிக்கு ஒத்தமுறையில் அருச்சனைசெய்யும் புனிதர்களாகிய சைவஅந்தணர்களும் அளவிடற்கரிய பத்திமையுடைய அடியவர்களும் அரகர என்று கூறும் அரசர்களும் மிகவிரும்ப, வளமான மறைமுழக்கமுடன் வரும் முருகனே ! குமரக்கடவுளே ! சிறுபறை முழக்கியருள்க. திரண்ட அழகிய முத்துகளைக் கரையில் அலைகள் எறியும்நகராகிய செந்திலுக்கு அதிபதியே சிறுபறை முழக்கியருளே. ( 81 )

9. தவனன்இர தப்புரவி வலமுறையின் வட்டமிடு
தருணவட வெற்(பு)அசையவே
தமரதிமி ரத்துமிதம் எறியும்மக ரப்பெரிய
சலதிஒலி அற்(று)அவியவே
புவனம்முழு(து) ஒக்கமணி முடிமிசை இருத்துபல
பொறிஉரகன் அச்சமுறவே
புணரிஇடை வற்றமொகு மொகுமொகு வெனப்பருகு
புயல்உருமு வெட்கியிடவே
பவனனும் மிகுத்தகடை உகமுடி(வு) எனப்பெருமை
பரவிஅடி யிற்பணியவே
படகநிபி டத்துழனி அசுரர்வெறு விக்கரிய
பரியவரை யிற்புகுதவே
சிவனருள் மதிக்கவரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளுமணி முத்தைஅலை எறியும்நக ருக்(கு)அதிப
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : தவனன்= ஞாயிறு. வலமுறையில் வட்டமிடு= வலமாகச் சுற்றிவரும் வடவெற்பு= மாமேருமலை, தருண அசைய= புதிதாக அசைய. தமரம்= பேரொலி. திமிரத்துமிதம்= கனத்த நீர்த்துளி. சலதி= கடல். அவிய= அடங்க. உரகன்= ஆதிசேடன். மொகுமொகுவென= விரைந்து. உருமுபுயல்= இடியுடைய மேகம். பவனன்= வாயுதேவன். கடை யுகமுடிவு= கடையூழிமுடிவு. மிகுத்த பெருமை அடியில் பரவிப் பணிய. படகம்= ஒருவகை இசைக்கருவி. நிபிடம்= நெருக்கம். துழனி= ஒலி. வரை= மலை.

**பொழிப்புரை** : ஞாயிற்றின் தேரினை இழுத்துவரும் குதிரைவலமாகச் சுற்றிவரும் மாமேருமலை புதிதாக அசைய, மீன்களுடன் பேரொலி எழுப்பும் கனத்த நீர்த்துளிகளை எறியும் கடல்தனது ஒலியின்றி அடங்க, உலகம் முழுவதையும் ஒருசேரத்தன் மணியுடைய முடியில் தாங்கும் பல புள்ளிகளுடைய ஆதிசேடன் அஞ்ச, கடலில் நீர்வற்றுமாறு விரைந்து நீர்பருகும் இடியுடைய மேகம் வெட்க, வாயுதேவன் இதுகடையூழி முடிவுக்காலம் என்று உன்பெருமையுடைய திருவடியை வணங்க, படகம் என்னும் இசைக்கருவியைஒலிக்கும் அசுரர்கள் அஞ்சிக் கரியபெரிய மலையில் புகுந்து ஒளிய, சிவபிரானின் திருவருள் மதிக்கவரும் முருகனே ! குமரக்கடவுளே ! சிறுபறை முழக்கியருள்க. திரண்ட அழகிய முத்துகளை அலை கரையில்எறியும் செந்தில்நகருக்கு அதிபதியே சிறுபறை முழக்கியருள்க. ( 82 )

10. சகரமக ரச்சலதி உலகுதனில் இப்பொழுது
சருவிய புறச்சமயநூல்
தலையழிய முத்திதரு சிவசமய முத்தர்பெறு
தவநெறி தழைத்துவரவே

அகரஉக ரத்தில்விளை பொருள்அடைவு பத்தியுறும்
அடியவர் தமக்(கு)அருளவே
அமரர்உல கத்தவரும் எவரும்மரு விப்பரவி
அடியிணை தனைப்பணியவே
பகரவும் நினைத்திடவும் அரி(து)உனது சொற்பெருமை
பரகதி அளிக்குமெனவே
பலபல முனித்தலைவர் அனைவரும் உனக்(கு)இனிய
பணிவிடை தனைப்புரியவே
சிகரபர வெற்பில்வரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளும்மணி முத்தைஅலை எறியுநகர் ருக்(கு)அதிப
சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : சகரச்சலதி= சகரரால் தோண்டப்பெற்ற கடல். சருவிய= மருவிய. தலையழிய= முழுவதும்அழிய. அகர உகரம்= ஓங்காரம். அடைவு=முழுதும். சொல்பெருமை= புகழின் பெருமை. பரகதி= வீடுபேறு. சிகர பரவெற்பு= சிவமாகிய திருப்பரங்குன்றம்.

**பொழிப்புரை** : சகரரால் தோண்டப்பெற்ற மீன்களுடைய கடல்சூழ்ந்த உலகில் மருவியுள்ள பிறசமய நூல்கள் முழுவதும் அழியவும், முத்திஅருளும் சைவசமய முத்தர்கள் பெறும் தவநெறி தழைத்து வரவும், ஓங்காரத்தில் தோன்றும் பொருள்முழுவதையும் பத்திமையுடைய அடியவர்க்கு அருளவும், தேவருலகவரும் பிறரும் உன்னையடைந்து போற்றி உன்திருவடிகளைப் பணியவும், சொல்லவும் நினைக்கவும் அரியதான உன்புகழின் பெருமை வீடுபேறுதரும் என்று மிகப் பல முனிவர்தலைவரும் உனக்கு இனியபணிவிடை செய்யவும், சிவமாக விளங்கும் திருப்பரங்குன்றில் எழுந்தருளியுள்ள முருகனே ! குமரக்கடவுளே ! சிறுபறை முழக்கியருள்க. திரண்ட அழகிய முத்துகளை அலை கரையில் எறியும் செந்தில்நகருக்கு அதிபதியே ! சிறுபறை முழக்கியருள்க. ( 83 )

## 9. சிற்றில்பருவம்.

( மகளிர் மணலில்கட்டி விளையாடும் சிறுவீட்டை அழிக்கும் சிறுகுறும்பு செய்து விளையாடும் பருவம். )

1. பொன்னின் மணக்கும் புதுப்புனலின் புடைசூழ் பணில முத்தெடுத்துப்
புறக்கோட்(டு) அகம்உண் டாக்கிவலம் புரியைத் தூதைக் கலம்அமைத்துக்
கன்னி மணக்கும் கழனியில்செங் கமலப் பொகுட்டு முகைஉடைத்துக்
கக்கும் செழுந்தேன் உலையேற்றிக் கழைநித் திலவல் சியைப்புகட்டிப்
பன்னி மணக்கும் புதுப்பொழிலில் பலபூப் பறித்துக் கறிதிருத்திப்
பரிந்து சிறுசோ(று) அடும்அருமை பாராய் அயிரா வதப்பாகன்
சென்னி மணக்கும் சேவடியால் சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத்(து) எறியும் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : பொன்னின்= பொன்போல் அருமையாக. புறக்கோட்டகம்= பக்கத்தில் வளைந்த சிற்றில். தூதைக்கலம்= சிறுமுட்டியாகிய சமையல் பாத்திரம். கன்னி= இளமை. முகைஉடைத்து=. மொட்டினைத்திறந்து. உலை= உலைநீர். வல்சி= அரிசி. பன்னி= இனிமை. திருத்தி= சமைத்து. பாராய்= பார்த்தருள். அயிராவதப் பாகன்= அயிராவத யானையைச் செலுத்தும் இந்திரன்.

**பொழிப்புரை** : பொன்போல் அருமையாகச் சிறந்துவிளங்கும் புதுப்புனலில்பக்கம் சூழ்ந்திருக்கும் சங்குகளின் முத்துகளைக் கொண்டு பக்கத்தில் வளைந்த சிற்றில்கட்டி, வலம்புரிச் சங்கினைச் சிறுமுட்டியாகிய சமையல் பாத்திரமாகக் கொண்டு, அதில்கழனியில் பூத்துள்ள இளமையான செந்தாமரையின் பொகுட்டினை உடைத்து அது கக்கும் மிக்கதேனை உலைநீராகப் பெய்து, கரும்பின் முத்தினை அரிசியாகப்பெய்து, இனிமை மணக்கும் புதுப்பொழிலில் உள்ள பலவகைப் பூக்களைப் பறித்துக் கறியாகச் சமைத்துப் பரிவுடன் சிறுசோறு ஆக்கும் அருமையைப் பார். தேவேந்திரனின் சென்னிமணக்கும் உன்சேவடியால் அற்பராகிய எம்சிற்றிலைச் சிதைக்காதே.

அலைகள் முத்துகளைக் கரையில் எறியும் கடலுடைய திருச்செந்தூர்ச் செல்வனே ! எம்சிற்றிலைச் சிதைக்காதே. ( 84 )

2. தையல் மடவார் இழைத்தவண்டல் தன்னை அழிக்கும் அதுக்கல்ல
தரளம் உறுத்தி உன்துபொற்பூந் தண்டைத் திருத்தாள் தடியாதோ
துய்ய தவளப் பிறைமுடிக்கும் சோதி எடுத்து முகத்தணைத்துத்
தோளில் இருத்தும் பொழுதுமணித் தோளிற்புழுதி தோயாதோ
வையம் அனைத்தும் ஈன்றெடுத்தும் வயது முதிரா மடப்பாவை
மடியில் இருத்தி முலையூட்டி வதனத்(து) அணைக்கின் உன்கழற்கால்
செய்ய சிறுதூள் செறியாதோ சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத்(து) எறியும் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : தையல்= அழகு. வண்டல்= விளையாடலாகிய சிற்றில். தடித்தல்= வீங்குதல். சோதி= ஒளிவடிவான சிவபிரான். உன்செய்ய கழற்கால்.

**பொழிப்புரை** : அழகிய பெண்கள் இழைக்கும் விளையாடலாகிய சிற்றிலை நீ அழிக்கும் செயலுக்காக அதை அழிக்காதே என்று கூறவில்லை. அழிக்கும்போது சிற்றிலைக் கட்டிய முத்துகள் உன்காலை உறுத்துமாதலின் அதனால் பொன்னாலான தண்டையணிந்தஅழகிய உன்கால்கள் வீங்கிவிடுமே ! தூய வெண்மையான பிறைசூடிய சோதியாகிய சிவபிரான் உன்னை எடுத்து உச்சிமோந்து அணைத்துத் தன்தோளில் இருத்தும் போது அவனுடைய அழகிய தோளில் உன்கால் புழுதி தோயுமல்லவா ? உலகம் அனைத்தும் ஈன்றும் வயது முதிராத இளைய பாவைபோன்ற உன் தாய் தனது மடியில் இருத்தி முலைப்பால் ஊட்டித் தன்முகத்தோடு உன்னை அணைத்தால் கழலணிந்த உன்காலில் உள்ள சிறுமண்தூள் அவள்மேல் அப்பாதோ ? எனவே அற்பமான எம் சிற்றிலைச் சிதைக்காதே ! அலைகள் முத்துகளைக் கரையில் எறியும் கடலுடையதிருச்செந்தூர்ச் செல்வனே ! சிற்றிலைச் சிதைக்காதே ! ( 85 )

3. தவ்வும் கரட மடையுடைக்கும் தந்திப் பகடு பிடிபட்டுத்
தருவும் அமுதும் இருநிதியும் தனியே கொள்ளை போகாமல்
எவ்வம் உறவிண் புலத்(து)அமரர் ஏக்கம் உறாமல் அயிராணி
இடும்மங் கலநாண் அழியாமல் இமையோர் இறைஞ்சும் அரமகளிர்
பௌவம் எறியும் துயர்ஆழிப் பழுவத்(து) அழுந்தி முழுகாமல்
பரக்கும் சுருதித் துறைவேள்வி பழுதாகாமல் பர(வு)அரிய
தெவ்வர் புரத்தை அடும்சிறுவா சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத்(து) எறியும் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : தெவ்வும்= தத்திப்பாயும். கரடம்= மதநீர். தந்திப் பகடு= தந்தமுடைய ஆண் யானையாகிய அயிராவதம். தருவும் அமுதும்= கற்பகமரமும் தேவாமுதமும். எவ்வம்= துன்பம். விண்புலம்= வானுலகம். மங்கலநாண்= தாலி. பௌவம்= நீர்க்குமிழி - நுரை. துயர்ஆழி= துன்பக்கடல். பழுவம்= ஆழம். தெவ்வர்புரம்= சூரபன்மனின் வீரமகேந்திரபுரம்.

**பொழிப்புரை** : தத்திப்பாயும் மதநீரால் மடையை உடைப்பதும், தந்தமுடையதுமாகிய ஆண்யானையாம் அயிராவதம் அசுரரிடம் பிடிபட்டுக், கற்பகமரமும் தேவாமுதமும் பெருஞ்செல்வமும் கொள்ளைபோகாமலும் , துன்புறும் வானுலக அமரர் ஏங்காமலும், இந்திராணியின் தாலி அழியாமலும், தேவர்கள் போற்றும் தேவமகளிர் நுரையெறியும் துன்பக்கடலின் ஆழத்தில் முழுகிப் போகாமலும், பெரிய வேதங்களின்படி செய்யும் வேள்வி பழுதுபடாமலும், போற்றுதலில்லாத சூரபன்மனின் வீரமகேந்திரநகரை அழிக்கும் சிறுவனே ! அற்பமான எமது சிற்றிலைச் சிதைக்காதே. அலைகள்முத்துகளைக் கரையில் எறியும் கடலுடைய திருச்செந்தூர்ச் செல்வனே ! சிற்றிலைச் சிதைக்காதே. (86)

4. ஆடும் கொடித்தேர் எழுபுரவி அருணன் நடத்தும் அகலிடத்தை
அடைவே படைத்தும் படைத்தபடி அளித்தும் துடைத்தும் முத்தொழிலும்
கூடும் பெருமை உனக்(கு)உளது கூடார் புரத்தைக் குழாம்பறிக்கக்
கொள்ளும் கருத்து நின்கருத்து கொங்கை சுமந்து கொடிமருங்குல்

வாடும் கலக விழிமடவார் மலர்க்கை சிவப்ப மணல்கொழித்து
வண்டல் இழைத்த மனைஅழிக்கை வன்போ சுரரும் மகவானும்
தேடும் கமலத் திருத்தாளால் சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத்(து) எறியும் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : எழுபுரவி= ஏழுகுதிரைகள். அருணன்= கதிரவன். அகலிடம்= அகன்றபூமி . அடைவே= முறைப்படி. கூடும்= நிறைவேற்றும். குழாம்பறிக்க= கூட்டமுடன் அழிக்க. கலகவிழி= துன்பம் காட்டும் பார்வை. கொழித்து= ஒதுக்கி. மனை= வீடு. வன்பு= வலிமை.

**பொழிப்புரை** : சூரியன், கொடிபறக்கும் தனது தேரில்பூட்டிய ஏழுகுதிரைகளையும் செலுத்தும் அகன்ற பூமியை முறைப்படி படைத்தலும் படைத்தவாறே முறைப்படிகாத்தலும் அழித்தலும் ஆகிய மூன்றுசெயல்களையும் நிறைவேற்றும் பெருமை உனக்குஉள்ளது. பகைவராகிய அசுரர்நகரை அதில்வாழும் அசுரர்களுடன் அழிக்கக் கொள்கிற கருத்து உன்கருத்தாகும். இந்நிலையில், தமது கொங்கைகளைச் சுமத்தலால் கொடிபோன்ற இடைவாடும் துன்பம்காட்டும் பார்வையுடைய மகளிர், மலர்போன்ற மென்மையான கைகள் சிவக்க, மணலை ஒதுக்கி இழைத்த விளையாட்டில் கட்டிய வீட்டினை அழித்தல் உன்வலிமையைக் காட்டுமோ ? தேவர்களும் தேவேந்திரனும் வணங்கத் தேடும் தாமரைமலர்போன்ற அழகியகாலால் அற்பராகிய எமது சிற்றிலைச் சிதைக்காதே. அலைகள் முத்துகளைக் கரையில் எறியும் கடலுடைய திருச்செந்தூர்ச் செல்வனே ! என்சிற்றிலைச் சிதைக்காதே. ( 87 )

5. புற்றில் அரவம் தனைப்புனைந்த புனித ருடனே வீற்றிருக்கப்
பொலியும் திகிரி வாளகிரிப் பொருப்பை வளர்த்துச் சுவராக்கிச்
சுற்றில் வளர்ந்த வரையனைத்தும் சுவர்க்கால் ஆக்கிச் சுடர்இரவி
தோன்றி மறையும் சுருப்பைவெளி தொறும்தோ ரணக்கால் எனநாட்டி
மற்றில் உவமை எனும்கனக வரையைத் துளைத்து வழியாக்கி
மாக முகிலை விதானம்என வகுத்து மடவா ருடன்கூடிச்
சிற்றில் விழைந்த பெருமாட்டி சிறுவா சிற்றில் சிதையேலே
திரைமுத்தெறியும் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : புற்றில் அரவம்= நல்லபாம்பு. புனிதர்= சிவபிரான். திகிரி வாளகிரி= சக்கரவாளமலை. சுருப்பை= மலையை. உவமை மற்றில்= தனக்கு வேறு உவமை இல்லாத. மாகம்= வானம். பெருமாட்டி= பார்வதிதேவி.

**பொழிப்புரை** : புற்றில்வாழும் நல்லபாம்பை அணிகலனாகத் தரித்த சிவபிரானுடன் பார்வதிதேவியாகிய தானும் வீற்றிருப்பதால் பொலிவுடன் விளங்கும் சக்ரவாளமலையை நீட்டிச் சுவராக அமைத்து, சுற்றிலும் வளர்ந்த மலைகளைச் சுவர்க்கால் ஆக்கி, ஒளிரும்ஞாயிறு தோன்றி மறையும் இருமலைகளையும் தோரணம் கட்டும் கால்களாக்கி, வானத்து மேகத்தை மேற்கட்டியாகக் கட்டி, சிற்றில்அமைத்து விளையாடிய பார்வதிதேவியின் மகனே ! எம்சிற்றிலைச் சிதைக்காதே , அலைகள் முத்துகளைக் கரையில்எறியும் கடலுடைய திருச்செந்தூர்ச் செல்வனே சிற்றிலைச் சிதைக்காதே. ( 88 )

6. மிஞ்சும் கனக மணித்தொட்டில் மீதே இருத்தித் தால்உரைத்து
வேண்டும் படிசப் பாணிகொட்டி விருப்பாய் முத்தம் தனைக்கேட்டு
நெஞ்சு மகிழ வரஅழைத்து நிலவை வருவாய் எனப்புகன்று
நித்தல் உனது பணிவிடையின் நிலைமை குலையேம் நீயறிவாய்
பிஞ்சு மதியின் ஒருமருப்புப் பிறங்கும் இருதாழ் கவுள்சுவடு
பிழியும் கரட மும்மதத்துப் பெருத்த நால்வாய்த் திருத்தமிகு
அஞ்சு கரக்குஞ் சரத்துணையே அடியேம் சிற்றில் சிதையேலே
அலைமுத்(து) எறியும் திருச்செந்தூர் அரசே சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : மிஞ்சும்= சிறந்துவிளங்கும். தால் உரைத்து= தாலாட்டுப் பாடி. குலையேம்= குலையமாட்டோம். பிஞ்சுமதியின்= மூன்றாம்பிறை போல். இருதாழ்= நீண்ட இரண்டு. கவுள்= கன்னம். மும்மதத்துக் கரடம் பிழியும் சுவடு= மூன்றுமதம் ஒழுகும் மதச்சுவடு. நால்வாய்= தொங்கும்வாய். குஞ்சரம்= யானைமுகத்து விநாயகர்.

**பொழிப்புரை** : பொன்னாலான அழகிய தொட்டிலில் இருக்கச்செய்து, தாலாட்டுப்பாடி, நீவிரும்புமாறு சப்பாணிகொட்டி, விருப்பத்துடன் முத்தம்தருமாறு கேட்டு, மனம்மகிழ வருமாறு அழைத்து, நிலவை உன்னுடன் விளையாட அழைத்து நாள்தோறும் உனக்குச்செய்யும் பணிவிடைகளின் நிலைமையில் குலையமாட்டோம் என்பதை நீ அறிவாய். மூன்றாம்பிறை போன்ற ஒற்றைத்தந்தம் விளங்கும் நீண்ட இரண்டு கன்னங்களுடன், மதநீர் ஒழுகும் சுவடுடைய தொங்கும் வாயுடன், மும்மதம் கொண்ட யானைமுகத்து அழகிய விநாயகர்க்குத் துணைவனே ! அடியேம் சிற்றிலைச் சிதைக்காதே. அலைகள் முத்துகளை எறியும் கடலுடைய திருச்செந்தூர்க்கு அரசே ! சிற்றிலை அழிக்காதே. **( 89 )**

**7.** துன்று திரைக்குண்(டு) அகழ்மடுவில் சூரன் ஒளிக்கப் பகைநிருதர்
தொல்லைப் பதியும் அவரிருந்து துய்த்த வளமும் தூளாக்கி
வென்று செருவில் பொரு(து) அழித்தாய் வேதா விதித்த விதிப்படியை
விலக்கி வெகுண்டு மீண்டளித்தாய் வேண்டும் அடியார் வினையொழித்தாய்
கன்று சமணர் கழுவேறக் காழிப்பதியில் வந்(து)உதித்துக்
கள்ளப் பரச மயக்குறும்பர் கலகம் ஒழித்துக் கட்டழித்தாய்
அன்று தொடுத்(து)உன் வழிஅடிமை அடியேம் சிற்றில் சிதையேலே
அலைமுத்(து) எறியும் திருச்செந்தூர் அரசே சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : துன்று= நெருங்கிய - அடுத்து அடுத்துவரும். குண்டு அகழ்= ஆழமாகத் தோண்டப்பட்ட. மடு= கடலின் ஆழத்தில். தொல்லைப் பதி= பழைமையான வீரமகேந்திர நகர். செருவில் பொருது வென்று அழித்தாய். வேதா= நான்முகன். விதித்த விதிப்படி= செய்துவந்த படைப்புத்தொழில். கன்று= மனம்வாடும்.. கட்டு= பெருமை.

**பொழிப்புரை** : அடுத்தடுத்துவரும் அலைகளுடையதும், சகரரால் தோண்டப்பெற்றதும் ஆகிய கடல் ஆழத்தில் சூரபத்மன் ஒளிந்துகொள்ளவும், போர்க்களத்தில் போரிட்டு வென்று பகையாகிய அசுரர்களின் பழைமையான வீரமகேந்திர நகரையும் அவர்களின் வளத்தையும் தூளாக்கிச் சூரனையும் வென்றாய். நான்முகனைச் சினந்து அவன் செய்துவந்த படைப்புத்தொழிலை நீசெய்து, பின்மீண்டும் அதை அவனுக்கு அளித்தாய். உன்னை வேண்டிக்கொண்ட அடியவர் இருவினைகளையும் ஒழித்தாய். சீர்காழியில் வந்து தோன்றி, வஞ்சனையான வேற்றுச்சமயக் குறும்பரான சமணர்களைத் தோல்வியால் மனம்வாடச் செய்து கழுவிலேற்றி அவர்களின் பெருமையை அழித்தாய். பண்டுமுதல் உனக்கு நாங்கள் அடிமை. எமது சிற்றிலைச் சிதைக்காதே. அலைகள் முத்துகளைக் கரையில் எறியும் கடலுடைய திருச்செந்தூர் அரசே ! சிற்றிலைச் சிதைக்காதே. **( 90 )**

**8.** களிப்பார் உனைக்கண் டவர்அவரே கண்ணும் மனமும் வேறாகிக்
கள்ளன் இவனை நம்முடைய காதல் வலையில் கட்டும்என
விளிப்பார் விரகம் அங்குரித்த வேடப் பலிப்பைப் பாரென்று
மெள்ள நகைப்பார் இவருடனே விளையா டாமல் வேறாகித்
துளிப்பார் திரைக்குண்(டு) அகழ்உடுத்த தொல்லைப் பதியும் பகிரண்டத்
தொகையும் தொகையில் பல்லுயிரும் தோற்றம் ஒடுக்கம் துணையாய்நின்(று)
அளிப்பாய் அழிக்கை கடன்அலகாண் அடியேம் சிற்றில் சிதையேலே
அலைமுத்(து) எறியும் திருச்செந்தூர் அரசே சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : கட்டும்= அகப்படுத்துவோம். விளிப்பார்= அழைப்பார். அங்குரித்த= முளைத்த. வேடப்பலிப்பு= வேடத்தின் வாய்ப்பை. துளிப்பார்= கண்கலங்குவார். தோற்றம்= படைத்தல். ஒடுக்கம்= சங்காரம்செய்தல் அளிப்பாய்= காப்பாய். கடன் அல= முறையன்று.

**பொழிப்புரை** : உன்னைக்கண்டவர் களிப்படைவார். களித்த அவர்களே காமத்தால் பார்வையும் மனமும் வேறுபட்டு நம்மனத்தில் ஒளிந்திருக்கும் கள்வனாகிய இவனை நம் காதல்வலையில் அகப்படுத்துவோம் என்று அவனைஅழைப்பார், இவனிடம் நம்மேல் முளைத்துள்ள கள்ளத்தனமான இந்த வேடத்தின் வாய்ப்பைப் பார் என்று மெள்ளநகைப்பார், சிலர் இவர்களுடன் விளையாடாமல் வேறாகிக் கண்கலங்குவார். இத்தகையோரிடையே; ஆழமாகத்தோண்டப்பெற்ற அலைகளுடைய கடலினை ஆடையாக உடுத்த பழைமையான இவ்வுலகையும், பேரண்டக்

கூட்டத்தையும், அவற்றில் வாழும் எண்ணற்ற பலவகை உயிர்களையும் படைத்தலும், ஒடுக்கலும், அவற்றுக்குத் துணையாய் விளங்கிக் காத்தலும்செய்யும் நீ எம்சிற்றிலை அழிப்பது முறைமையன்று. அடியவராகிய எம்சிற்றிலைச் சிதைக்காதே. அலைகள் முத்துகளைக் கரையில் எறியும் கடலுடைய திருச்செந்தூர் அரசே ! சிற்றிலைச் சிதைக்காதே. ( 91 )

9. கூவிப் பரிந்து முலைத்தாயர் கூட்டி எடுத்து முலையூட்டிக்
குடுமி திருத்தி மலர்செருகிக் கோலம் புனைந்து கொண்டாடிப்
பூவிற் பொலிந்த திருமேனிப் புனிதா வண்டல் புறத்துஎயிலில்
புகுந்தால் இனிஉன் உடலேறப் புழுதி இறைத்துப் போகாமல்
காவிக் குறுந்தோட்(டு) இதழ்நெருக்கும் கண்ணிதனைக் கொண்(டு)ஓச்சிவளைக்
கானல் தரளத் தொடையாலுன் கைத்தா மரையைக் கட்டிவிடோம்
ஆவித் துணையே வழியடிமை அடியோம் சிற்றில் அழியேலே
அலைமுத்(து) எறியும் திருச்செந்தூர் அரசே சிற்றில் அழியேலே.

**குறிப்புரை** : கூவி= அழைத்து. முலைத்தாயர்= வளர்ப்புத்தாய்மார். பூவில்= பூப்போல். புறத்து எயிலில்= வெளியேயுள்ள மதிற்கண். ஏற= மிகுதியாக. இறைத்துப் போகாமல்= படியாமல். காவி= குவளை மலர். நெருக்கும் கண்ணி= நெருக்கமாகக் கட்டிய மாலை. ஓச்சி= வீசி விசிறி. கானல் தரள வளைத்தொடை= கடற்கரைச் சோலையில் எடுத்த முத்துகளால்ஆன மாலை. கட்டி விடோம்= உன்னைக்கட்டிவைத்து வெளியே விடமாட்டோம். ஆவி= உயிர்.

**பொழிப்புரை** : மலரிதழ் போல் பொலியும் அழகிய மேனிஉடைய புனிதனே ! நீ எமது வண்டல்வீட்டின் புறத்தேயுள்ள கோட்டையில் புகுந்தால், வளர்ப்புத் தாயாகியநாங்கள் உன்னை முன்பு அழைத்து ஒருசேர எடுத்து முலைப்பாலூட்டி, முடியினைத் திருத்திப், பூச்சூட்டி, அழகூட்டிக் கொண்டாடிய உன் உடலில் புழுதி மிகுதியாகப் படியாமல் குவளைமலரின் சிறிய இதழ்களால் தொடுக்கப் பெற்ற மாலையால் விசிறி, கடற்கரைச் சோலையில் எடுத்த முத்துகளால் ஆனமாலையால் உன்னைக்கட்டிப்போட்டு வெளியே விடமாட்டோம். எம் உயிருக்குத் துணையானவனே ! வழிவழி உனக்கு நாங்கள் அடிமை. ஆதலால் அடிமையாகிய எமது சிற்றிலை அழிக்காதே. அலைகள் முத்துகளைக் கரையில் எறியும் கடலுடைய திருச்செந்தூர் அரசே ! சிற்றிலை அழிக்காதே. ( 91 )

10. பொய்யா வளமை தரும்பெருமைப் பொருநைத் துறையில் நீராட்டிப்
பூட்டும் கலன்கள் வகைவகையே பூட்டி எடுத்து முலையூட்டி
மெய்யால் அணைத்து மறுகுதனில் விட்டார் அவரை வெறாமல்உனை
வெறுக்க வேறு கடனும்உண்டோ விரும்பி பரலைக் கொழித்(து)எடுத்துக்
கையால் இழைத்த சிற்றிலைநின் காலால் அழிக்கை கடன்அலகாண்
காப்பான் அழிக்கத் தொடங்கிலெங்கள் கவலை எவரோ(டு) இனிஉரைப்போம்
ஐயா உனது வழியடிமை அடியேம் சிற்றில் சிதையேலே
அலைமுத்(து) எறியும் திருச்செந்தூர் அரசே சிற்றில் அழியேலே.

**குறிப்புரை** : கலன்= அணிகலன். மெய்யால்= உடம்புடன். மறுகு= தெரு. கடன்உண்டோ= முறையில்லை. கடன் அல= முறைமையல்ல.

**பொழிப்புரை** : சற்றும் பொய்க்காமல் தன் வளங்களைத்தரும் தாமிரவருணித்துறையில் உன்னை நீராட்டி, பூட்டும் அணிகலன்களை வகைவகையாகப் பூட்டி, உன்னைத் தூக்கி முலையால் பாலூட்டி, உடம்போடு அணைத்து, தெருவில் உன்னைவிட்டவரை வெறுக்காமல் உன்னை வெறுப்பது முறையல்ல. நாங்கள் விருப்புடன் மணலைக் கொழித்துப் பரல்களை எடுத்து, எம்கைப்படக் கட்டிய சிற்றிலை உன்காலை அழிப்பது முறையன்று. காக்கவேண்டிய நீயே அழிக்கத் தொடங்கிவிட்டால் எங்கள் கவலையை யாரிடத்தில் முறையிடுவோம் ? ஐயனே ! நாங்கள் வழிவழிஉன் அடிமை !. எமது சிற்றிலைச் சிதைக்காதே. அலைகள் முத்துகளைக் கரையில் எறியும் கடலுடைய திருச்செந்தூர் அரசே ! சிற்றில்லை அழிக்காதே. ( 93 )

## 10. சிறுதேர்ப் பருவம்.

( பருவத்துக்கேற்ற கைத்தேர் உருட்டி விளையாடும் பருவம் )

**************

1. தண்தேன் உடைந்(து) ஒழுகும் மருமாலை நீள்முடி தரிக்கும் சதக்கிருதுசெந்
தருணமணி ஆசனத்(து) ஏறமா தலிசெழுந் தமனியத் தேர்உருட்ட
பண்டே பழம்பகை நிசாசரர்கள் உட்கப் பரப்புநிலை கெட்டதென்று
பரவும்கு பேரன்வட பூதரம் பொருபுட் பகத்தேர் உருட்டவீறு
கொண்டே உதித்தசெங் கதிர்ஆயிரக்கடவுள் குண்டலம் திருவில்வீச
கோலப்ர பாமண் டலச்சுடர் துளக்கமுட் கோலெடுத்(து) அருணஅருணன்
திண்தேர் உருட்டவளர் செந்தில்வாழ் கந்தனே சிறுதேர் உருட்டியருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : உடைந்து= கட்டவிழ்ந்து. மரு= மணம். சதகிருது= இந்திரன். தருணம்= புதுமை. மாதலி= இந்திரனின் தேரோட்டியாகிய மாதலி. பரப்பு= பரந்த உலகம். உட்க= அஞ்ச. வடபூதரம்= மாமேருமலை. பொரு= ஒத்த. வீறு= பெருமை. செங்கதிர் ஆயிரக்கடவுள்= ஆயிரம் செங்கதிர் கொண்ட சூரியன். அருண அருணன்= சூரியனின் தேர்ப்பாகன் ஆகிய அருணன் முட்கோல்= தார்க்குச்சி. திருவில் வீச= தெய்விக ஒளிவீச. ப்ரபாமண்டலம்= ஒளிமண்டலமாகிய பரிவேடம். துளக்கமுற= ஆட. பதாகை= கொடி. குமாரகம்பீரன்= குமாரனாக இருந்தே வீரசாகசம் புரிந்தவன்.

**பொழிப்புரை** : கட்டவிழ்ந்து தேன் ஒழுகும் மணம்மிக்க மலையைத் தன்நீண்ட திருமுடியில் தரிக்கும் இந்திரன் புதுமையான அழகிய இருக்கையிலிருக்க, தேரோட்டியான மாதலி தேரினைச் செலுத்த, பண்டைகாலம் முதலே பழம்பகைகொண்ட அசுரர்கள் பரந்தஉலகுநிலை கெட்டது என்று அஞ்ச, போற்றும் குபேரன் மேருமலைஒத்த தனது புட்பகத்தேரினைச் செலுத்த, பெருமையுடன் உதித்த செங்கிரணங்கள் ஆயிரம்கொண்ட செந்நிறச்சூரியனின் தேரோட்டியாகிய அருணன் தார்க்குச்சியை எடுத்துத் தேரினைச் செலுத்த, உன்அழகிய குண்டலம் ஆட, அழகிய ஒளிமண்டலமாகிய பரிவேடம்ஒளிர செந்திலில் எழுந்தருளியுள்ள கந்தனே ! சிறுதேர்உருட்டியருள்க. சேவற்கொடியுடைய குமரனாய் வீரசாகசம் புரிந்தவனே சிறுதேர் உருட்டியருள்க. **( 94 )**

**2.** வாராரும் இளமுலை முடைத்துகில் பொதுவியர் மனைக்குள் புகுந்துமெள்ள
வைத்தவெண் தயிர்உண்டு குடம்உருட் டிப்பெருக வார்வெண் ணெயைஉருட்டிப்
பாராமல் உண்டுசெங் கனிவாய் துடைத்துப் பரும்சகடு தன்னைஅன்று
பரிபுரத் தாளால் உருட்டிவிளை யாடுமொரு பச்சைமால் மருகபத்தி
ஆராமை கூறும்அடி யவர்பழ வினைக்குறும்(பு) அறவே உருட்டிமேலை
அண்டபகி ரண்டமும் அனைத்(து)உலக மும்செல்லும் ஆணைஆ ழியைஉருட்டிச்
சேராநி சாசரர் சிரக்குவடு உருட்டநீ சிறுதேர் உருட்டியருளே
சேவற்ப தாகைக் குமரகம் பீரனே சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : வார்= முலைக்கச்சு. முடை= முடைநாற்றம். பொதுவியர்= இடைச்சியர். வார்வெண்ணை= உயர்ந்த வெண்ணை. பாராமல்= திருட்டுத்தனமாக. சகடு= வண்டியாகவந்த சகடாசுரன். ஆராமை= தெவிட்டாமை. குறும்பு= வலிமை. ஆணைஆழி= ஆணைச்சக்கரம். உருட்டி= செலுத்தி. சிரக்குவடு= தலையாகிய குன்று.

**பொழிப்புரை** : கச்சணிந்த இளமுலைகளுடையவரும், முடைநாற்றம் வீசும்ஆடை உடுத்தவரும் ஆகிய இடைச்சியர் வீட்டினில் திருட்டுத்தனமாக மெள்ளப்புகுந்து, அவர்கள் வைத்த வெண்மையான தயிரைப் பருகி, பெரிதாக உருட்டிவைத்த உயர்ந்த வெண்ணெயை உண்டு, சிவந்தகனி ஒத்த தன் வாயினைத்துடைத்துக்கொண்டு, அந்நாளில் பெரிய வண்டியாக வந்த சகடாசுரனைத் தனது சிலம்பணிந்த காலால் உருட்டிவிளையாடிய ஒப்பற்ற பச்சைநிறத்துத் திருமாலின் மருமகனே ! பத்திசெலுத்துவதில் தெவிட்டாத தன்மையுடைய அடியவர்களின் பழைமையாகிய இருவினையின் வலிமையை முற்றாகத்தள்ளி, மேலும் அண்டம், பேரண்டம், அனைத்து உலகம் ஆகியவற்றில் தன் ஆணைச்சக்கரம் செலுத்தி, பொருந்தாத அசுரர்களின் தலையாகிய குன்றுகளை உருட்டநீ சிறுதேர் உருட்டியருள்க. சேவற்கொடியுடைய குமரனாய் வீரசாகசம்புரிந்தவனே ! சிறுதேர் உருட்டியருள்க. **( 95 )**

**3.** கொந்(து)அவிழ் தடஞ்சாரல் மலயமால் வரைநெடும் குடுமியில் வளர்ந்ததெய்வக்
கொழுந்தென்ற லங்கன்றும் ஆடகப் பசுநிறம் கொண்டுவிளை யும்பருவரைச்

சந்தன நெடுந்தரு மலர்ப்பொதும் பரும்இயல் தண்பொருநை மாநதியும்அத்
தண்பொருநை பாயவிளை சாலிநெல் குலையும்அச் சாலிநெல் குலைபடர்ந்து
முந்தவிளை யும்பரு முளிக்கரும் பும்பரு முளிக்கரும் பைக்கறித்து
முலைநெறிக் கும்புனிற்(று) எருமைவா யும்சிறுவர் மொழியும் பரந்தவழியும்
செந்தமிழ் மணக்கும் திருச்செந்தில் வேலனே சிறுதேர் உருட்டியருளே
சேவற்ப தாகைக் குமாரகம் பீரனே சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : கொந்து அவிழ்= பூங்கொத்துகள் மலர்ந்த. தட= பெரிய. மலயமால்வரை= பெரிய பொதிகைமலை. குடுமி= சிகரம். தென்றலங்கன்று= அழகிய இளந்தென்றல். ஆடகம்= பொன். பருவரைவிளையும்= பெரியமலையில் விளையும். பொதும்பர்= சோலை. இயல்= ஓடும். முந்தவிளையும்= உயரமாக வளரும். பருமுளி= பருத்த கணு. பரந்தவழி= விரிந்த இடம்.

**பொழிப்புரை** : பூங்கொத்துகள் மலர்ந்த பெருமலைச்சாரலுடைய பெரியபொதிகைமலைச் சிகரத்தில்வளர்ந்த தெய்வத்தன்மைவாய்ந்த வளமானஅழகிய இளந்தென்றலும், அப்பெரியமலைக்கண் சிறந்த பொன்னிறம் கொண்டுஉயரமாக வளர்ந்த சந்தனமலர்கள் மலர்ந்த சோலையும், ஓடும்சிறந்த தண்பொருநை நதியும், அதன் நீர்பாய விளையும் சாலியாகிய நெற்குலையும், படர்ந்த அந்த நெற்குலையிடை உயரமாக வளர்ந்து முற்றிய பருத்த கணுக்களுடைய கரும்பும், அக்கரும்பைக் கறித்துத் தன்முலைகளில் பாலொழுக்கும் ஈன்றணிமைவாய்ந்த எருமைவாயும், சிறுவர் சொற்களும் பரந்துபட்ட வெளியுமாக எங்கும் செவ்வியஇனிமைமணக்கும் திருச்செந்தில் வேலனே ! சிறுதேர் உருட்டியருள்க. சேவற்கொடியுடைய குமரனாய் வீரசாகசம்புரிந்தவனே ! சிறுதேர்உருட்டியருள்க( **96** )

4. பெருமையுடன் நீடுஅலத் திருவர்பர சமயமும் பேதம் பிதற்றிவிட்ட
பிறைமருப் புக்கரும் பகடுமுந் நீரில் பிழைத்துநீள் கரையில் ஏறப்
பொருவரும் சந்நிதியில் எய்துவது போல்மணி புடைக்கும்இள நீர்இரண்டு
புணரியில் மிதந்துசன் னிதிஏற இந்நாள் பொருந்தவிளை யாடிமுன்னாள்
இருதரையின் நின்சந் தனக்கொடி மரத்தினை இழுத்துவரு எருமைஏற்றை
எப்பொழுதும் முதியகல் பகடாக உலகத்தில் யாவரும் காணவென்று
திருவுளம் மகிழ்ந்துதிரு விளையாடல் கண்டநீ சிறுதேர் உருட்டியருளே
சேவற் பதாகைக் குமரகம் பீரனே சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : நீடு அலம்= நீண்ட கலப்பை. திருவர்= திருமாலின் அமிசமான பரசுராமர். பேதம் பிதற்றிவிட்ட சமயம்= வேறுபடக் கூறிய சமயம். கரும்பகடு= கரிய எருமைக்கடா. முந்நீரில் பிழைத்து= கடலிலிருந்து பிழைத்து. பொருவரும் சன்னிதி= ஒப்பற்ற உந்திருமுன். மணி= அழகு. புணரி= கடல். பொருந்தவிளையாடி= திருவிளையாடல் நிகழ்த்தி. முன்னாள்= முற்காலத்தில். இருதரை= நீண்ட தரையில். எருமை ஏற்றை= எருமைக்கடாவை. முதியகல் பகடாக= கல்லுருவில் நிற்கும் முதியஆண் எருமையாக.

**பொழிப்புரை** : திருமாலின் அமிசமாகக் கூறப்பெறும் நீண்ட கலப்பையினைப் படைக்கலனாக ஏந்திய பரசுராமர் வேறுபடக்கூறிய சமயமும்; கடலில் இருந்துபிழைத்துக் கரை ஏறிய பிறைபோல் வளைந்த கரியகொம்புகளுடைய ஆண்எருமையும் ஒப்பற்ற நின் திருமுன்னடைவன. அதுபோல் இந்நாளில் அழகிய பருத்த இரண்டு இளநீர்கள் கடலில் மிதந்துவந்து நின்திருமுன் ஏறத்திருவிளையாடல் புரிந்தும், முன்னாளில் நீண்டதரையில் உனது சந்தனத்தாலான கொடிமரத்தினை இழுத்துவந்து சேர்த்த எருமைக்கடாவை எப்பொழுதும் யாரும்காணுமாறு கல்வடிவக்கடாவாகத் திருவுளம்செய்து மகிழ்ந்து திருவிளையாடல் புரிந்தநீ சிறுதேர் உருட்டியருள்க. சேவற்கொடியுடைய குமரனாய் வீரசாகசம் புரிந்தவனே ! சிறுதேர் உருட்டியருள்க. ( **97** )

5. ஆதிநூல் மரபாகி அதனுறும் பொருளாகி அல்லவை அனைத்தும்ஆகி
அளவினுக்(கு) அளவாகி அணுவினுக்(கு) அணுவாய் அனைத்துயிரும் ஆகிஅதனின்
சாதியின் பிரிவாகி வெவ்வேறு சமயங்கள் தானாகி நானாகிமெய்ச்
சாலோக சாமீப சாரூப சாயுச்ய தன்ஒளியின் லீலையாகி
ஓதிய(து) அனைத்தினும் அடங்காமல் வேறாகி உள்ளும் புறம்புமாகி
ஒளியில்ஒளி யாகிமற்(று) இரவுபகல் அற்றஇடம் ஒப்புவித்(து) எனைஇருத்தித்
தீதினை அகற்றிநின் திருவருள் புரிந்தவா சிறுதேர் உருட்டியருளே

சேவற்ப தாகைக் குமாரகம் பீரனே சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : மரபு= முறைமை. அதனின்= அவ்வுயிர்களின். சாதி= வகை. நான்= ஆன்மா மெய்= ஞானம். சாலோகம்= இறையுலகில் இருத்தல். சாமீபம்= இறையருகில் இருத்தல். சாரூபம்= இறையுருவுடன் இருத்தல். சாயுச்யம்= இறையுடன் இரண்டறக்கலந்திருத்தல் ( அத்துவிதமுத்தி.) லீலை= விளையாட்டு. தீதினை அகற்றி= மும்மலங்களை நீக்கி. இரவு பகல் அற்ற இடம்= வீடுபேறு. ஒப்புவித்து= சேரச்செய்து.

**பொழிப்புரை** : மறைகூறும் முறைமையாகி, அம்மறையின் உட்பொருளாகி, அவையல்லாத அனைத்தும் ஆகி, அளவைகளுக்கெல்லாம் அளவைஆகி, அணுவுக்கு அணுவாகி, எவ்வகைப்பட்ட உயிர்களும் ஆகி, அவற்றின் பலவகைப்பிரிவாகி, வெவ்வேறு சமயங்களாகி, ஆன்மாஆகி, ஞானத்தால் அமையும் சாலோக சாமீப சாரூப சாயுச்யம் ஆகிய தனது ஒளியின் விளையாட்டாகி, கூறிய அனைத்திலும் அடங்காமல் அவற்றின் வேறாகி, அவற்றின் உள்ளும் புறம்புமாகி, ஒளியில் விளங்கும் ஒளியாகி, மேலும் என்மும்மலங்களை நீக்கி, வீடுபேற்றில் என்னைச் சேர்த்து உனது திருவருளை வழங்கியவனே ! சிறுதேர் உருட்டியருள்க. சேவற்கொடியுடைய குமரனாய் வீரசாகசம் புரிந்தவனே ! சிறுதேர் உருட்டியருள்க. ( 98 )

6. புலமை வித்தக மயூரவா கனவள்ளி போகபூ ஷணசூரன்
சலம்ஒ ழித்தவ நிசிசரர் குலாந்தக சடாட்சர காங்கேய
குலவு கொற்றவ குமாரகண் டீரவ குருபர புருகூதன்
உல(கு)அ ளித்தவா செந்தில்வாழ் கந்தனே உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட உருட்டுக சிறுதேரே

**குறிப்புரை** : வித்தக= ஞானியே. போகபூஷண= கணவனே. சலம்= வஞ்சனை. நிசிசரர்=அசுரர். குலாந்தக= குலத்தை அழித்தவனே. சடாட்சர காங்கேய= சரவணபவ என்னும் ஆறெழுத்துக்குரிய காங்கேயனே. குமாரகண்டீரவ= குமரப்பருவத்துச் சிங்கமே. புருகூதன் உலகு= இந்திரனின் தேவலோகம். அளித்த= காத்த. கொற்றவ= வெற்றியனே. உரக நாயகன்= ஆதிசேடன். பஃறலை= பலதலைகள்.

**பொழிப்புரை** : புலமை சான்ற ஞானியே, மயில் ஊர்தியனே, வள்ளிநாச்சியார்க்குக் கணவனே, சூரபத்மனின் வஞ்சனைகளை ஒழித்தவனே, அரக்கர் குலத்தை அழித்தவனே, ஆறெழுத்தாகிய சரவணபவ என்பதை மந்திரமாகவும் திருப்பெயராகவும் உடைய காங்கேயனே, விளங்கும் வெற்றியனே, குமரப்பருவத்துச் சிங்கமே, மேலான குருவே, இந்திரனின் தேவருலகைக் காத்தவனே, செந்திலில் எழுந்தருளியுள்ள கந்தனே சிறுதேர் உருட்டுக. பாம்புகட்குத் தலைவனாகிய ஆதிசேடனின் பலதலைகளும் பொடிபடச் சிறுதேர் உருட்டுக. ( 99 )

7. வீதி மங்கல விழாவணி விரும்பிய விண்ணவர் அரமாதர்
சோதி மங்கல கலசகுங் குமமுலை தோய்ந்(து)அகம் களிகூரச்
சாதி மங்கல வலம்புரி இனம்எனத் தழைசிறை யொடுபுல்லி
ஓதி மம்துயில் செந்தில்வாழ் கந்தனே உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை** : அரமாதர்= தேவமகளிர். தோய்ந்து= படிந்து. இனம்= தன்இனம். புல்லி=தழுவி

**பொழிப்புரை** :வீதியில் மங்கல அழகினை விரும்பிய வானவர், தேவமகளிரின் ஒளிபொருந்திய மங்கலம் சான்ற கலசம்ஒத்த குங்குமம்பூசிய கொங்கைகளில் படிந்து மனம்மிக மகிழ, மங்கலமான உயரினத்து வலம்புரிச்சங்கின் கூட்டத்தைத் தன் இனமாகக்கருதி வெண்மையான சிறகினையுடைய அன்னப்பறவைகள் அவற்றைத் தழுவித் துயிலும் செந்திலில் எழுந்தருளியுள்ள கந்தனே ! சிறுதேர் உருட்டுக. பாம்புகட்குத் தலைவனாகிய ஆதிசேடனின் பலதலைகளும் பொடிபடச் சிறுதேர் உருட்டுக. ( 100 )

8. விரைத்த டம்பொழில் வரைமணி ஆசனத்(து) இருந்துவிண் ணவர்போற்றி
வரைத்த டம்புரை மழவிடை எம்பிரான் மனம்மகிழ் திடவாக்கால்
இரைத்த பல்கலைப் பரப்பெலாம் திரட்டிமற்(று) இதுபொருள் எனமேனாள்

உரைத்த தேசிகா செந்தில்வாழ் கந்தனே உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை** : வரை விரைத்தடம்பொழில்= கயிலைமலையில் உள்ள மணம்கமழும் அகன்றசோலையில். மணி ஆசனத்து= அழகிய இருக்கையில். வரைத் தடம்புரை மழவிடை= மலை மேடு - மலைஉயரம்போன்ற பெரியஎருது ஊர்தி. வாக்கால் இரைத்த= சொல்லால் முழங்கிய ஓங்காரம். இதுபொருள்= பரசிவமாகிய இதுவே ஓங்காரப்பொருள். மேநாள்= முன்னாளில். தேசிகா= குருவே.

**பொழிப்புரை** : கயிலைமலையில் உள்ள மணம்கமழும் அகன்ற சோலையில் அழகிய இருக்கையில் இருந்து, தேவர்கள் வணங்க, மலையின் உயரம்போல் விளங்கும் இளம்எருது ஊர்தியுடைய சிவபிரான் சொல்லால் முழங்கிய ஓங்காரத்தின் பொருள் இதுதான்என்று விரிந்த பலகலைகளின் பொருளெல்லாம் திரட்டிப் பரசிவமே அதன்பொருள் என்று சிவபிரானுக்கு உபதேசித்த குருவே ! செந்திலில் எழுந்தருளியுள்ள கந்தனே ! சிறுதேர் உருட்டுக. பாம்புகளுக்குத் தலைவனாகிய ஆதிசேடனின் பலதலைகளும் பொடிபடச் சிறுதேர் உருட்டுக. **( 101 )**

**9.** மாது நாயகம் எனவடி(வு) உடையசீர் வள்ளிநா யகமண்ணில்
ஈது நாயகம் எனஉனை அன்றிவே(று) எண்ணநா யகம்உண்டோ
போது நாயகன் புணரியின் நாயகன் பொருப்புநா யகன்போற்றி
ஓது நாயக செந்தில்வாழ் கந்தனே உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடுபட உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை** : நாயகம்= தலைமை. வடிவு= அழகு. நாயக= கணவனே. ஈது மண்ணில்= இவ்வுலகில். நாயகம்= தலைமையானவன். நாயகம்= தலைவர். போது நாயகன்=தாமரைமலரில் இருக்கும் தலைவன் - நான்முகன், புணரியின் நாயகன்= திருப்பாற்கடலில் இருக்கும் தலைவன் - திருமால். பொருப்பு நாயகன்= கயிலைமலையில் இருக்கும் தலைவன் - சிவபிரான். போற்றிஓது= பாராட்டிச்சொல்லும்.

**பொழிப்புரை** : பெண்களுக்கெல்லாம் தலைமையானவள் என்றுகூறும் அழகுடைய வள்ளிநாயகிக்குக் கணவனே,. இவ்வுலகில் தலைமையானவன் என்று கூறத்தக்கவர் உன்னையன்றி வேறுயாரும் உண்டோ ? இல்லை. நான்முகன், திருமால், சிவபிரான் ஆகியோரால் பாராட்டப்பெறும் தலைவனே ! செந்திலில் எழுந்தருளியுள்ள கந்தனே ! சிறுதேர் உருட்டுக. பாம்புகளுக்கெல்லாம் தலைவனாகிய ஆதிசேடனின் பலதலைகளும் பொடிபடச் சிறுதேர் உருட்டுக.
இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி. **( 102 )**

**10.** தக்க பூசனைச் சிவமறை யோர்பெரும் தானநா யகர்தம்பேர்
திக்க னைத்தினும் எண்முதல் இமையோர் தேவர்தம் திருமேனி
மிக்க மாலிகை தருபவர் அடியவர் மின்னனார் சமயத்தோர்
ஒக்க வாழ்கெனச் செந்தில்வாழ் கந்தனே உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை** : பெருந்தான நாயகர்= தேவலோகத் தலைவன் - இந்திரன். எண்முதல் இமையோர்= எண்திசைப் பாலகர் முதலிய தேவர்கள். மாலிகை= திருக்கோயில் மாலை - திருப்பள்ளித்தாமம். மின் அனார்= திருக்கோயில் பணிசெய்யும் மகளிர். ஒக்க= ஒருசேர.

**பொழிப்புரை** : ஆகமங்கள் கூறியதற்குத் தக்கவாறு பூசனைபுரியும் சிவஅந்தணர், தேவலோகத் தலைவனாகிய இந்திரன், தம்புகழுடன் எண்திசைகளையும் காக்கும் எண்திசைப் பாலகர் முதலிய தேவர்கள், இறைவனுடைய திருமேனிக்குச் சிறந்த மாலை - திருப்பள்ளித்தாமம் தருபவர், அடியவர், திருக்கோயிற் பணிபுரியும் பெண்டிர், சமயம்சார்ந்தவர் ஆகிய அனைவரும் ஒருசேர வாழ்க என்று செந்திலில் எழுந்தருளியுள்ள கந்தனே ! சிறுதேர் உருட்டுக. பாம்புகளுக்குத் தலைவனாகிய ஆதிசேடனின் பலதலைகளும் பொடிபடச் சிறுதேர் உருட்டுக. ( **103** )

திருச்சிற்றம்பலம்.